மெட்றாஸில் பாண்டிபஜார், குமரன்ஸ், நல்லி போன்று கனடாவில்
சிறந்து விளங்குவதும், நம்பிக்கையானதும் ஒரே புடவை மாளிகை

# விஜயாஸ் சில்க்

## மனம் கவரும் புடவை மாளிகை!



என்றும் புதிய டிசைன்கள்
என்றும் புதிய ஸ்ரைல்கள்!
என்றும் விதம் விதமான தெரிவுகள்!
என்றும் அழகுக்கு அழகூட்டும்
உன்னத படைப்புகள்!
மங்கையர், ஆடவர், சிறுவர்,
குழந்தைகள் அனைவருக்கும்
புதிய நவீன் டிசைன்களில்
பெற்றிடவும்

## அதுமட்டுமல்ல!

சிறந்த தரம்!
சிறந்த தெரிவுகள்!
சிறந்த விலை
எல்லாம் ஒன்றாக
ஒருங்கிணைந்து
ஒன்ராரியோவில்
உங்களுக்காக
விஜயாஸ் சில்க்

## *Vijaya's Silk*

**Tel: (905) 273-7997 Fax: (905) 273-7323**

**27 DUNDAS STREET EAST, MISSISSAUGA, ONT.**




**வெளியிடுவோர்:**
**வேதாந்த ஞானமன்றம்**

**77- 4020 Dundas St. West**
**Toronto Ont. M6S 4W4**

**Tel:(416) 769-7747**

**Fax:(416) 769-4902**
**After 6:00 pm & Weekends**

**(416) 805-7187**

**ஆசிரியர்:**

**அடியார் விபுலானந்தா**

**Typesetting & Page Layout:**

**Ultra Graphic**



உ
சிவமயம்

**$1.50**

# மதம் வெளியீடு
# மார்கழி 97 வேது இதழ்

அன்பான மதம் வாசகர்களே! நீண்ட இடைவெளிக்குப் பின் மதம் மீண்டும் உங்கள் கைகளில் கிடைக்கிறது. பல அன்பர்கள் வேண்டுதல் நிறைவேறும் வண்ணம் மதம் இனிமேல் இறைவன் அருளால் தொடர்ந்து வரும்.

## புத்தாண்டு வாழ்த்துக்கள்!

1998 புத்தாண்டுடன் உங்கள் இல்லங்களில் தெய்வீகமும்,சகல மங்களங்களும் பெருகட்டும். உங்கள் எல்லோருக்கும் அமைதியும் மகிழ்ச்சியும் பெருகட்டும். இறைவன் எப்போதும் எம்மோடு எம்முள்ளே இருக்கிறான் எனும் எண்ணம் உணர்வுகளோடு அலைமோதி எல்லோரும் ஆனந்தக்களிப்பு அடைவோமாக!

எப்போதும் எந்நாளும் இன்பமே சூழ்க!

ஆசிரியர்

உங்கள் அடியவனான
**அடியார் விபுலானந்தா**

## பொருளடக்கம்

# வேதாந்த ஞான மன்றம் - கனடா (நவம்பர் 1997ல்)



ஸ்காபரோவில் மிட்லன்ட் அன் எக்ளின்ரன் சந்திப்பில் நடைபெறும் சமய தமிழ் வகுப்பில் நற்போதனை பெறும் மாணவர்களும் குருவும் (அன்னை திருமதி லீலா வெற்றிவேற்கரசு)

"அம்மா, அப்பா, குரு (நற் போதனை அளிப்பவர்) மூவரும் தெய்வங்கள்"

நல்ல போதனைகளே பிள்ளைகளின் எதிர்காலத்தை வளமாக்கும்!

# பக்தியோடு கேட்பவர்க்கு கேட்டபடி கொடுக்கும் ஐயப்பன்

## சுவாமியே சரணம் ஐயப்பா

செழிப்புமிக்க சேரத்தமிழகம் இன்று கேரளா என்ற பெயரோடு மலையாள மொழிகொண்டு விளங்குகின்றது. ஸ்ரீஇராமர் சீதாபிராட்டியாருடன் வனவாசத்தின்போது சிலகாலம் வசித்த புண்ணிய பூமி பம்பை நதி ஓடும் சபரிமலை அடிவாரம். சபரிமலை உச்சியிலே அருள் வழங்கும் ஐயப்பன் வீற்றிருக்கிறார். அடர்ந்த காடு பல கொடிய மிருகங்கள் வாழுகின்றன. அங்கே பல அரிய மூலிகை மரங்களும் செடிகளும் உள்ளன. பல முனிவர்கள் தவம் செய்த புனித பிரதேசம்.



புனித பிரதேசமான சபரிமலைக்கு செல்வதற்கு யாருக்கும் இலகுவாக சந்தர்ப்பம் கிடைத்துவிடாது. புண்ணியம் செய்த சிறந்த பக்தர்களுக்குத்தான் கிடைக்கிறது. முற்பிறவி களில் அல்லது இப்பிறவி யிலோ செய்த புண்ணியத்தின் பலனாகத் தான் சபரி மலை யாத்திரை கை கூடுகிறது.

ஐயப்பனுக்கு வருடா வருடம் கார்த்திகை மாதம் பல லட்சக்கணக்கான பக்தர்கள் மாலையிட்டு 41 நாட்கள் மண்டல விரதம் இருப்பார்கள். மாலை போட்டு விரதம் இருக்கும் ஐயப்ப பக்தர்கள் கறுப்பு அல்லது நீலநிற ஆடைகள் அணிந்து மிக எளிமையாக இருப்பார்கள். விரதகாலங் களில் பிரம்மச்சாரியத்தைக் கடைப்பிடித்தும், வீட்டில் பலபக்தர்களை அழைத்து அன்னதானமிட்டு பூஜை செய்து ஐயப்ப சரணகோஷம் பாடியும், பல ஆலயங்களை தரிசனம் செய்து அடர்ந்த காடுள்ளதும் பயங்கர மிருகங்களும் உள்ள காட்டு வழியாக மலை ஏறுவார்கள். விரதகாலத்தில் தினமும் பல லட்சக்கணக்கான பக்தர்கள் மலை ஏறுவர்கள். மலை உச்சியிலே ஐயப்ப சுவாமி கோவிலிலே பதினெட்டுப்படிகள் உள்ளன. இப்படிகளிலே மாலைஇட்டு இருமுடி கட்டிச் செல்லும் பக்தர்கள் மட்டுமே ஏறமுடியும்.

பக்தியோடு இருமுடிதாங்கிப் பலரின் வேண்டுகோளையும் தாங்கி 18 படிகளும் ஏறிச் செல்வோரை ஐயப்பன் மனம்குளிர வரவேற்கிறான். ஐயப்பன் சன்னிதானத்திலே பிறரின் நலனுக்காக வேண்டுபவர்களுக்கு சகல மங்களங்க ளையும் அளிக்கிறான் அந்த சபரிமலை நாயகன்.

## ஐயப்பன் மாலை இடுதல்

வருடா வருடம் கார்த்திகைமாத ஆரம்பத்தில் ஐயப்ப மண்டல பூஜை ஆரம்பமாகும். இக்காலங்களிலே ஐயப்பன் அடியார்கள் ஐயப்ப சன்னிதானத்தில் மாலை அணிந்து விரதம் அனுஷ்டிக்கிறார்கள். மாலை இடும் பக்தர்கள் உள்ளத்தில் ஐயப்பன் அந்தர்யாமியாக உறைகிறான். இக்காலங்களிலே மாலையிட்ட சாமிமாரை வணங்கினால் ஐயப்பனை வணங்குவதற்கு ஈடாகும். இக்காலங்களில் மாலை இட்ட ஐயப்பன் சாமிமார் சாப்பிட்ட இலை தூக்குபவர்களுக்கும் கூட பல நன்மைகள் ஏற்படுகிறதென ஐதீகம். சபரிமலை செல்லும் யாத்திரிகர்களுக்கு செலவுக்காகப் பணம் கொடுப்பவர்களுக்கும் பெரும் புண்ணியம் கிடைப்பதாக ஐதீகம்.

## ஐயப்பன் சரண கோஷம்

ஐயப்ப பக்தர் சேர்ந்து ‘சரணம் சரணம் ஐயப்பா, சாமி சரணம் ஐயப்பா’ எனும் சரணகோஷங்களை ஆலயங்களிலும், வீட்டிலும், மலையேறும்போதும் சொல்லுவார்கள். மலை ஏறும் பாதை குறிப்பிட்ட நாள்வரை

திறந்து பூட்டும்வரை அந்தக் காட்டிலுள்ள மிருகங்கள் பாதை அருகே வருவதுமில்லை, பக்தர்களுக்கு தீங்கிழைப்பதுமில்லை. அவ்வழியே பக்தர்களின் சரண கோஷம் ஒலித்துக்கொண்டே இருக்கும். காட்டிலே வீசும் மூலிகைகளின் காற்று பக்தர்களுக்கு சிறந்த ஆரோக்கியத்தைக் கொடுக்கின்றது. பெரிய பாதை 42 கிலோமீற்றர் தூரம்; சிறிய பாதை 14 கிலோமீற்றர் தூரம் பக்தர்கள் நடையாகவே நடந்து செல்வார்கள். இயலாத வயோதிப பக்தர்களை டொலியில் தூக்கிச் சென்ற கோவிலடியில் விடுவார்கள்.

யார் மாலைபோட்டு விரதம் அனுஷ்டிக்க விரும்புகிறார்களோ அவர்களுக்கு ஐயப்பன் பார்வை நேரடியாக கிட்டுகிறது. விரதம் அனுட்டித்தவர்களுக்கு கஷ்டங்கள் நீங்குகிறது. உயர்ந்த நன்மைகள் ஏற்படுகிறது.

## வடஅமெரிக்காவில் மூன்று ஐயப்பன் ஆலயங்கள்.

அமெரிக்காவிலே வாஷிங்டன் DC நகருக்கு அண்மையில் உள்ள மேரி லாண்டில் அமைந்திருக்கும் சிவா விஷ்ணு ஆலயத்தில் ஐயப்பனுக்கும் ஆலயம் உண்டு. கனடாவில் மொன்றியாலுக்கு அண்மையில் உள்ள வல்மொரின் முருகன் ஆலயத்திலும் ஐயப்பனுக்கு சிறு ஆலயம் உண்டு. ரொரன்ரோ மாநகரில், ஸ்காபரோவில் உள்ள ஸ்ரீ ஐயப்பன் ஆலயமே பெரிய ஆலயமாக அமைந்து வருகிறது. இங்கே பல நூற்றுக்கணக்கான பக்தர்கள் கூடும் ஞாயிறுக்கிழமை நண்பகல் பூசை மிகவும் சிறப்பாக இருக்கும். இவ் ஆலயத்துக்குச் செல்லும் அடியார்கள் எல்லோருக்கும் அன்னதானம் வழங்கப் படுகிறது. இவ் ஆலயத்தின் நிர்வாகிகள் எல்லோரும் பெரும்பாலும் உண்மையான பக்தர்களாகவும் நல்ல பண்புள்ளவர்களாகவும் நேர்மை உள்ளவர்களாகவும் இருப்பதனால் ஆலய வளர்ச்சி துரிதமடைகிறது.

மிக நல்ல பக்தர்கள் இங்கு வந்து பக்தியோடு கைதட்டி பஜனை கோஷம் செய்வதால் ஆலயம் மேலும் மேலும் புனிதமடைகிறது. ஞாயிற்றுக்கிழமை நண்பகல் நடைபெறும் ஆராதனையின்போது அடியவர்கள் கூடி ஐயப்பனின் சரணகோஷம் செய்யும்போது பக்தர்களால் வேண்டப்படும் வேண்டுதல்கள் ஐயப்பனால் நிறை வேற்றப்படுகிறது. ஸ்காபரோவில் அமைந்துள்ள ஐயப்பன் ஆலயத்துக்குச் செல்லும் பக்தர்கள் நன்மைகள் பெற்று வருவதை எல்லோரும் அறியத் தொடங்கியுள்ளார்கள்.

இங்கு வரும் அடியார்கள் எல்லோரும் சேர்ந்து ஐயப்பன் சரண கோஷத்தை பக்திபொங்கப்பாடுகிறார்கள். அதனால் ஐயப்பன் இங்கு பக்தர்களுக்கு தனது அருளை அள்ளி வழங்குகிறார். ஐயப்பனுக்கு நிரந்தர ஆலயம் அமைக்க வேண்டி பக்தர்கள் விரும்பிய விருப்பம் நிறைவேறி வருகிறது. 6 லட்சம் டொலர் செலவில் சிறந்த நிலமும் சிறுகட்டிடமும் சேர்ந்து ஆலய நிர்வாகம் வாங்கியுள்ளது. இப்படியான நல்ல நிர்வாகத்தினரால் நடாத்தப்படும் இந்த ஆலயத்துக்கு நிலம் வாங்கவும், கட்டிடம் அமைக்கவும் பணம் கொடுத்தவர்கள் உண்மையில் பாக்கியசாலிகளே. இவர்களால் கொடுக்கப்பட்ட பணம் பல நூறு மடங்காக ஏதாவது ஒரு வழியில் இவர்களைச் சென்று சேரும். அத்தோடு தெய்வீக அருளும் புண்ணிய பலன்களும் இவர்களை வந்தடையும்.

ஐயப்பன் ஆலய நிர்வாகிகளையும், ஐயப்பன் அடியார்களையும் வேதாந்த ஞான மன்றம் வணக்கம் கூறி வாழ்த்துகிறது.

அடியார்கள் குறைதீர்க்கும் சபரிமலையோனே
ஆறுதல் தந்திடும் ஐயப்ப சாமியே
கஷ்டங்கள் தீர்க்கும் சபரிகிரீசா
காத்து அருளும் கருணை வள்ளலே
துன்பங்கள் தீரும் உன்னை நினைத்தால்
தனங்கள் பெருகும் உன்பெயர் சொன்னால்
வா வா எங்கள் ஐயப்பா
வந்திடுவாய் எம் உள்ளக்குகையில்
சரணம் சரணம் ஐயப்பா
சாமியே சரணம் ஐயப்பா

## 'ஈதல் இசைபட வாழ்தல்'

**நல்ல காரியங்களுக்காக கொடுக்கும் பழக்கம் உள்ளவர்களே உயர்ந்த சாதியினர் இதை எம் தமிழ் மூதாட்டி 'இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்' என சொல்லியுள்ளார்.**

**நல்ல காரியங்களுக்குக் கொடுத்து உதவாமல் வாழ்பவர்களை விட மனித குலத்துக்கு உதவும் ஆடு, மாடு, கோழி, நாய் போன்ற பிராணிகள் எத்தனையோ மடங்கு மேலானவை.**

**மதம் எப்போதும் உதவி செய்பவர்களைப் போற்றாமல் விடுவதில்லை. ஏற்கனவே மதம் சஞ்சிகைக்கு நன்கொடை அளித்தோரையும், சரீர உதவி செய்தோரையும், அவர்களின் பெயர்கள் நன்றியுடன் வெளியிடப்பட்டது. அதேபோல் மேலும் நன்கொடையாக திரு. வ. தனபாலசிங்கம் அவர்கள் 50 டொலர்கள், திரு. முத்துலிங்கம் குணரட்ணம் 100 டாலர்கள் அன்பளிப்புச் செய்தார்கள் அவர்களுக்கும் அவர்கள் குடும்பத்தினருக்கும் இறைவன் எல்லா நலன்களையும் அளிப்பாராக.**

# வட அமெரிக்காவில் முருகன் ஆலயம்

## ஸ்ரீ அருட்குரு சுவாமி பிரகாசமயானந்தா

முருகப் பெருமானின் திருஅவதாரம் மிகவும் சிறப்பு வாய்ந்தது. மிகவும் தொன்மையானது. அற்புதமும், அதிசயமும், அருளும் நிறைந்தது.

வியாச பகவான் வேதங்களை நாலாகத் தொகுத்தார். வேத வியாசர் எனப் போற்றப்பட்டார். அதன் பின் பாமரமக்களும் மெய்ப்பொருளை எளிதாக விளங்கும் பொருட்டு பதினெட்டுப் புராணங்களை இயற்றினார். அவற்றுள் ஸ்கந்த புராணம் கூடுதலான பாடல்களுடன் தலைசிறந்து விளங்கியது. இவை யாவும் தெய்வமொழியான ஸமஸ்க்ருத மொழியில் இயற்றப்பட்டன. சுமார் ஆயிரத்து நூறாண்டுகளுக்கு முன் முருகன் அனுக்கிரகம் பெற்ற கச்சியபசிவாச்சாரியர் சுவாமிகள் இவ் அரிய நூலை மேற்கோளாகக் கொண்டு அற்புதமாக இனிய தமிழ் பாடல்களால் கந்த புராணத்தை அருளினார்கள். பரவசமாக முருகனின் தோற்றத்தை குறிப்பிடும் போது 'கருணை கூர் முகங்கள் ஆறும் கரங்கள் பன்னிரண்டும் கொண்டே ஒரு திருமுருகன் வந்து ஆங்கு உதித்தனன் உலகம் உய்ய' என்று பாடுகிறார்கள்.



முருகன் கருணையின் அவதாரம் என்றும் உலகம் உய்யவே தோன்றினார் என்பதும் மிகவும் தெளிவாகிறது. இதே போல நக்கீர தேவ நாயனார் அருளிய தனிச்சிறப்பு வாய்ந்த, சங்கத் தமிழ் நூல்களில் தலைமை பெற்று விளங்கும் 'திருமுருகாற்றுப் படை' ஆரம்பவரியில் 'உலகம் உவப்ப' என்று பாடுகிறார்கள்.

மாணிக்கவாசகப் பெருமான் திருவாய் மலர்ந்தருளிய திருவாசகத்தில் 'தென்னாடுடைய சிவனே போற்றி எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி' என்று துதிக்கிறார். சிவபெருமானே முருகப் பெருமானாக அவதாரம் பெற்றார். அதே போல் முருகனும் எந்நாட்டவராலும் வழிபட்டு வருவதாகவுள்ளார்.

இமயமலையில் தோன்றி பாலலீலைகளை நடத்தியபின் தென் இந்தியா, தமிழ்நாட்டில் அற்புத திருவிளையாடல்கள் தொடர்கின்றன. திருச்செந்தூரில் சூரசம்சாரம் நடைபெறுகிறது. தனி அற்புதம் எதிரி அடிமையாகி சேவலும் மயிலுமாக தொண்டர்களாகிறார்கள். தமிழ்நாட்டில் தனிச்சிறப்பான ஆறுபடை வீடுகள், மற்றும் முருகன் கோயில்கள், இந்துக் கோயில்கள், பக்தர் கூட்டங்கள் பெருக்கெடுக்கின்றன. அயல் நாடுகளுக்கும் செல்கின்றன.

முருகனின் தனி அனுக்கிரகம் தோன்றிய காலத்திலேயே பெற்றவர்கள் நாரத முனிவர். அகத்திய முனிவர் தொடர்ந்தும் நடைபெறுகின்றன. கச்சியப்ப சிவாச்சரியார், நக்கீரதேவர்; அருணகிரிநாதரை ஆட்கொண்டு பெரும்பொக்கிஷமான திருப்புகழ் களை வெள்ளம்போல் பாட வைத்து, கந்தர் அனுபூதி, கந்தர் அலங்காரம், கந்தர் அந்தாதி முதலிய அருட் நூல்களையும் பொழிய வைத்தார். சேய் நாடாகிய இலங்கையிலும் பல அற்புத ஆலயங்கள் தொன்று தொட்டு உள்ளன. தனி விசேஷமாக விளங்குவது. இரு சிவன் ஆலயங்களாகிய திருக்கேதீஸ்வரமும், திருக்கோணேஸ்வரமும், பிரசித்தி பெற்ற கதிர்காம கந்தனின் ஆலயமும், சுந்தரமூர்த்தி நாயனார் திருக்கேதீஸ்வரப் பெருமான் மேலே பதிகம் அருளினார்கள். திருஞானசம்பந்த நாயனாரால் திருக்கேதீஸ்வரப் பெருமான் மீதும் திருக்கோணேஸ்வரப் பெருமான் மீதும் பதிகங்கள் அருளப்பட்டன. அத்துடன் அருணகிரிநாத சுவாமிகள் திருக்கோணமலை முருகன் மீது அருளிய திருப்புகழ் தனி விசேஷம் உடையது. கதிர்காமப் பெருமான் மீது பல திருப்புகழால் அலங்கரித்தார்கள். வள்ளி அம்மையார் அவதரித்த புண்ணிய பூமி என போற்றப்படுகிறது. கதிர்காம தரிசனத்துக்கும், உற்சவங்களுக்கும், தீமி விழாவிற்கும் அந்நிய

நாட்டவர்களும், பிற மத்த்தவர்களும் வருவார்கள்.

பதினேழாம் நூற்றாண்டில் திருச்செந்தூர் முருகன் ஐந்து வயது ஊமைப்பிள்ளைக்கு காட்சி கொடுத்து பாட வைத்தார். அவரே இந்து சமயத்துக்கு பெரும் தொண்டாற்றிய குமரகுருபர சுவாமிகள், அவர் முதல் பாடிய திருச்செந்தூர், கந்தர் கலிவெண்பாவைப் பாராணயம் செய்வோர் உடல் பிணிமுதல் பிறவிப் பெரும் பிணிவரை யிலிருந்து விடுதலை பெற்று ஆட்கொள்ளப்படுகின்றனர். தொடர்ந்தும் பல முருக பக்தர்கள் சிறந்து விளங்கி வருகின்றனர். சிதம்பர சுவாமிகளின் திருப்போரூர் சந்நிதிமுறை, இராமலிங்க சுவாமிகளின் அருட்பாக்கள், தேவராய சுவாமிகளின் கந்தர் சஷ்டி கவசம், பாம்பன் சுவாமிகளின் சண்முக கவசம்.

ஸமஸ்கிருதத்தில் மகாகவி காளிதாஸ் காளி அம்பாளின் அனுக்கிரகத்தால் இயற்றிய நூல்களில் 'குமார சம்பவம்' உம் சிறந்தது. பகவத்பாதர் ஆதி சங்கராச்சாரியார் நோயால் பீடிக்கப்பட்டபோது திருச்செந்தூர் முருகன்மீது 'சுப்ரமண்ய புஜங்கம்' பாடி குணமடைந்தார்.

வடஇந்தியாவில் கார்த்திக் சுவாமி என்று அழைக்கப்படுகிறார். சமீபகாலத்தில் Delhi, Bombay, Haridwar, Rishikesh மற்றும் இடங்களிலும் முருகன் கோயில்கள், வழிபாடுகள் சிறப்பாக நடைபெற்று வருகின்றன. சிங்கப்பூரிலும், மலேசியாவிலும் இந்துக் கோயில்கள் பலவற்றுள் முருகன் கோயில்களும் உள. விசேஷமான Batu Caves முருகன் கோயில் தைப்பூசவிழா காவடி உற்சவத்தில் பல மதத்தினர்களும் பங்கு பற்றுவார்கள். அந்நிய நாடுகளான Fiji தீவுகள், England, Canada, America வில் இந்துக் கோயில்கள் பலவற்றுள் முருகன் கோயில்களும் உள. விசேஷ உற்சவங்கள் நடைபெற்று வருகின்றன.

முருகப் பெருமானின் அளப்பெருங் கருணையால் Lanham, Maryland, America வில் அமைதியான சூழலில் சோலைகள் மத்தியில் 'முருகன் கோயில்' என்னும் சிறப்பு திருநாமத்துடன் ஓர் அற்புதக் கோயிலை அமைப்பதற்கு பல பக்தர்களின் மனதில் ஓர் எழுச்சியை உண்டாக்கி August 1982இல் இந்து சமயத்துக்கும் பெரும் பணியாற்றி, முருகன் கோயில்கள், மற்றும் இந்துக் கோயில்களுக்கும் அரும்பெரும் திருப்பணிகள் செய்வித்தவருமான அமரர் திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகளால் அத்திவாரம் போடப்பட்டது. மூலஸ்தானத்தில் அருள்பாலிக்கும் வள்ளி தெய்வானை சமேத முருகப் பெருமானின் திருஉருவம் ஓர் பிரமாண்டமான கோயிலில் வீற்றிருப்பார்கள். அதற்குரிய கட்டடங்கள் அமைக்கப்பட்டு வருகின்றன. முருகன் திருவருளாலும் மகான்களின் அருளாலும் அடுத்த ஆண்டாகிய 1997 மத்தியில் திருப்பணி வேலைகள் யாவும் பூர்த்தியாக்கி கும்பாபிஷேக பெரும் நல்விழா, நடாத்த உத்தேசிக்கப் பட்டிருக்கிறது. இத் திருத்தொண்டில் பக்தகோடிகள் அனைவரும் பங்குபற்றவும், தங்களால் இயன்ற பணஉதவி, பொருள் உதவி, சரீர உதவி, மனதாலும் வாயாலும் வாழ்த்தி போற்றும். உதவி யாவற்றையும் புரியும்படி பணிவன்புடன் அழைக்கப்படுகின்றனர்.

தற்பொழுது, ஓர் சிறு கட்டிடத்தில் பிள்ளையார், முருகன், சிவன், அம்பாள், நவக்கிரகங்கள் விக்கிரகங்களுக்கு சிறப்பாக பூசைகள் நடைபெற்று வருகின்றன. இங்கு வழிபட்டு வருகின்ற விநாயகப்பெருமானின் விக்கிரகம் தனிச்சிறப்புடையது. இந்நூற்றாண்டில் இலங்கையில் அவதரித்த மாக சித்தரான யோக சுவாமிகளின் சிஷ்யர் குருதேவா சிவாய சுப்ரமுனிய சுவாமி, Hawaii இல் சைவ சித்தாந்த ஆதீனம் கடவுள் கோயில் அமைத்து அரும்பெரும் தொண்டு ஆற்றிவருகிறார்கள். அவர் அன்பர்களுக்கு அளித்த வினாயகப் பெருமானின் சிலை இங்கே பூஜிக்கப்பட்டு வருகின்றது.

சமயகுரவர்கள், நாயன்மார்கள், மகான்களின் அடிச்சுவட்டை பின்பற்றுவோமாக. திருநாவுக்கரசு நாயனார் திருத்தொண்டுகள் பல புரிந்தார்கள். பல கோயில்களுக்கு பாதயாத்திரையாகச் சென்று உழவாரப் பணியுடன் தேவாரப் பதிகங்களும் உருக்கமாகப் பாடி அற்புதங்கள் பல செய்தார்கள். கஷ்டங்களையும் பொருட்படுத்தாது திருக்கைலாச யாத்திரை செய்யும் பொழுது அருட் காட்சி பெற்றார். ஆலய தரிசனம், பாதயாத்திரையின் பயனை 'திரு அங்க மாலை'யில் குறிப்பிடுகின்றார். 'தேடிக் கண்டு கொண்டேன் -திருமாலொடு நான்முகனும் தேடித் தேடொணாத் தேவனை என்னுளே தேடிக் கண்டு கொண்டேன்' கோயில் வழிபாடுகள் உருக்கத்தோடு ஒரு மனதோடு செய்வதால் அடையும் பயனை

'காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக வாய்மைமே தூய்மையாக மனமணி இலிங்கமாக நேயமே நெய்யும் பாலா நிறைய நீரமைய ஆட்டிப் பூசனை ஈசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே. என்று அவர் தேவாரம் கூறுகிறது. மாணிக்கவாசகப் பெருமான் அருள் வாக்கு 'அவன் அருளாலே அவன்தாள் வணங்கி அவன் அருளாலே தான் கோயில் வழிபாடு கிடைக்கும். அவன் அருளை நாடி இத் திருப்பணியில் மனமுவந்து யாவரும் ஈடுபடுவோமாக. போட்டி பொறாமையைத் தவிர்த்து அன்புடன் வாழ்வோமாக.

'அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்:
அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருப்பாரே'

– திருமூலர் திருமந்திரம்

'எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே அன்றி
வேறொன்றும் அறியேன் பராபரமே.'

– தாயுமான சுவாமிகள்

9ம் பக்கம் பார்க்க

ஓம் ஸ்ரீராம ஜெயம்

# கோவில் மதம் வாழ்வு

முதலாவதாக ஆலயம் தொழுவது சாலமும் நன்று எனும் ஔவையாரின் திருவாக்கை நாம் எல்லோரும் படித்துள்ளோம். இரண்டாவதாக இல்லறம் அல்லது நல் அறம் அன்று என்னும் திருவாக்கையும் படித்துள்ளோம்.

இன்று நாம் ஆலயங்கள் அமைப்பதிலும் திரு விழாக்கள் நடாத்துவதிலும் மிகவும் ஆர்வம் காட்டுகிறோம். ஆலயம் சென்று இறைவன் வழிபடுவதிலும் ஆர்வம் காட்டு கிறோம். ஆலய வழிபாட்டுமுறை ஆன்மீகத்துறைக்கு ஆரம்பப் பாடசாலை என்பதை நாம் அறிந்து கொள்ளாமல் இருக்கிறோம்.

ஆலயத்துக்குச் சென்று வழிபாடுசெய்து விரதங்களை கடைப்பிடிப்பதாலும் நாம் சமயத்தைக் கடைப்பிடிப்பதாக நினைக்கிறோம். நாம் தற்போது நீண்ட காலமாக அரிச்சுவடியைக் கற்கும் அரிவரி (Kindergarden) வகுப்பில் தான் இருக்கிறோம். அதாவது ஆரம்பப்படியில் நின்று கொண்டு முன்னேறாமல் இருக்கிறோம். நம்மில் 99 வீதமானவர்கள் இல்லறம் என்றால் என்ன என்பதைப் புரியாமல் இருக்கிறோம். தேவாரத்தை மனப்பாடம் பண்ணிப் பாடுவதும் கோவிலுக்கு சென்று தொழுவதும் விரதம் பிடிப்பதும் தான் சமயம் என்று நினைத்துக் கொண்டி ருக்கிறோம்.

பார்க்கும் இடமெங்கும் நீக்கமற நிறைந்திருப்பவன் இறைவன். அவன் இல்லாத இடமில்லை. இறைவன் வீட்டிலும் இருக்கிறான். 'சுத்தமுள்ள வாசனை உள்ள ஒளிபொருந்திய இடங்களில் நான் இருப்பேன்' என கீதை யில் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா கூறினார். வீட்டிலும் இறைவன் உள்ளான். வீடு சுத்தமாகவும் வாசனை உள்ளதாகவும் வெளிச்சம் உள்ளதாகவும் இருந்தால் நிச்சயமாக இறைவன் அங்கு வாசம் செய்வார். வீடு அழுக்காகவம், துர்நாற்றம் வீசுவதாகவும், இருள் உள்ளதாகவும் இருந்தால் அந்த வீட்டில் கெட்ட ஆவிகள் (பிசாசுகள், பேய்கள்) குடியிருக்கும். எனவே வீட்டை நாம் சுத்தமாகவும் வாசனை உள்ளதாகவும் வெளிச்சமுள்ளதாகவும் வைத்திருக்க வேண்டும் அப்படியான வீடுகளில் தேவர்களும் வந்து நல்லதை நிறைவேற்றி வைக்கிறார்கள். இல்லம் என்பது ஆலயம். விக்கிரங்கள் வைத்துப் பிரதிஷ்டை செய்த ஆலயங்கள் பொதுமக்களின் ஆலயங்கள். ஆனால் நோக்கரிய நோக்கானவன் நுணுக்கரிய நுண்ணுணர்வானவனாகிய இறைவன் எல்லா மனிதரிடத்திலும் இதயங்களில் உள்ளார். அவன் நுண் உணர்வாக நம்முள்ளே உள்ளான். எனவே நமது உடலும் ஆலயம்.

எமது இதயமோ அழுக்கால் மூடப்பட்டிருப்பதால் நாம் சீவனாகவே வாழ்ந்து கொண்டிருக்கிறோம். நம் இதயத்தின் அழுக்கு நீங்கும்போது நாம் சிவனாகவும் சக்தியாகவும் உள்ள தெய்வமாக மாறிவிடுகிறோம்.

'தெள்ளத் தெளிந்தார்க்கு சீவன் சிவலிங்கம்'

வாழ்வும் மதமும் வேறல்ல

நாம் சமயத்தை ஆலய வழிபாட்டோடு விட்டு விடக்கூடாது நாம் பல உண்மைகளை அறியாமையால் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். நமது மத்தியிலே சான்றோர்கள் அருகியுள்ளார்கள். ஒழுக்கக்கேடும், பொய் யும் தலைவிரித்தாடுகிறது. மக்கள் வீட்டுக்குள் அமைதியற்ற நிலையிலும் மாக்களாகவும் வாழுகிறார்கள. நாம் கீழ் நிலையில் இருந்து மேல்நிலைக்கு உயரவேண்டும். நல்வாழ்வுக்கு சமயம் மிக மிக முக்கியம். ஆலயம் தொழுவது முதல்படி அடுத்தபடியாகிய வாழ்வின் முக்கிய தளமான குடும்ப அமைப்புக்கு, குடும்ப ஒழுக்கமான இல் அறத்துக்குச் சென்று முன்னேற வேண்டும். (இல்லம் + அறம் = இல்லறம்) அறம் என்பது ஒழுக்கம் இதைத்தான் வடசொல்லாகிய தர்மம் என்று நம்மிடையே பேச்சுவழக்கில் உள்ளது

ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும் என வள்ளுவர் ஒழுக்கத்தை உயர்வாகக் கூறுகிறார். குடும்ப வாழ்வுக் கென மகான்களால் விதிக்கப்பட்ட ஒழுக்க விதிகளே இல்லறம் என்று விளக்கப்படுகிறது. ஒழுக்கத்தை பின்பற்றா தவர்களுடைய வாழ்வு கீழ்நிலைக்கு தள்ளப்பட்டு விடுகிறது. ஒழுக்கம் உள்ளவர்கள் வாழ்வோ மேன்மை அடைகிறது. துறவிகளும் அறத்தை மேற்கொள்ளும்போது உயர்ந்த கதி அடைகிறார்கள்.

குடும்பம் என்பது ஒரு புனிதமான இயக்கம். கணவன் மனைவி இடையே அன்பு பிள்ளைகளிடத்திலே அன்பு அவரவர் கடமையாகிய குடும்ப சேவை, விருந்து பசாரம், அயலவரை நேசித்தல் போன்ற உயர்நத ஒழுக் கத்தை கடைப்பிடிக்கும்போது தான் வாழ்வு மேன்மை அடைகிறது. இன்று அறம் எனும் உயர்ந்த கல்வி இளமையில் கற்பிக்கப்படவேண்டும். இவற்றை ஆச்சிர மங்களிலும், மகான்களிடமும் மகான்கள் எழுதிய நூல் களிலும் நல்லோரிடமுமே கற்கமுடியும். நவீன கல்வி முறையில் அன்பு, பக்தி, ஞானம் மூன்றையும் பெற முடியாது.

ஆங்கிலேயரின் கல்வித்திட்டத்தால் இந்தியா விலும் இலங்கையிலும் சமயம் தரும் ஒழுக்கநெறிகள் வாழ்க்கையிலிருந்து வேறுபடுத்தப்பட்டு வருகிறது. எமது சமுதாயத்தின் திறமைசாலிகள் அறநெறிப்படிப்பு பெற முடியாத சூழ்நிலையில் வெறும் பட்டப்படிப்புக்கு உந்தப்பட்டு சான்றோர் ஆகும் தன்மையையும் இழந்து, சமூகத்தை நல்வழிப்படுத்த முடியாதவர்களாகவும், தம்மை உணர்ந்து கொள்ளமுடியாதவர்களாகவும், போலி வாழ்க்

கைக்குத் தள்ளப்பட்டும் வாழவேண்டியுள்ளது. இந்த நிலைக்கே தமது தலைமுறையினரையும் உருவாக்கு கிறார்கள்.

சமயத்தின் உண்மைகளை பல மகான்கள் விளக்கியுள்ளார்கள். அவற்றை நாம் படித்தால் மட்டும் போதாது. நமது அறிவினால் ஆராய்ந்து உணர்வுகளிலே ஊறவிடவேண்டும் நமது மனதைப் பண்படுத்த வேண்டும். சமயங்கள் வாழ்வைப் பண்படுத்தவே தோன்றியுள்ளன! சமயங்கள் நமது அறியாமையைப் போக்கவே தோன்றி யுள்ளன! சமயங்கள் நமது பலவீனத்தைத் தெளிவு படுத்தவே தோன்றின! ஆனால் நாமோ அறிய முடியாமை ஆகிய அறியாமையில் வாழுகின்றோம்.

நீரால் உடலைச் சுத்தப்படுத்தலாம். ஆனால் நல்ல அறிவினால் தான் மனம் சுத்தமடையும். நல்ல அறிவுதான் நல்ல நெறியைக் காட்டும். நல்ல அறிவை கற்று மனதைப் பண்படுத்திய பிள்ளை பல்கலைக்கழகம் வரை சென்று பட்டம் பெற்றால் குடும்பம் மட்டுமல்ல பலரும் நன்மை அடைவார்கள்.

அந்த காலத்திலே எமது பெண்கள் அறிவு டையவர்களாக இருந்தார்கள். ஏனென்றால் பிள்ளையைப் பெற்றெடுத்தபோது இருந்த மகிழ்ச்சியைவிட பிள்ளையை சான்றோன் என பிறர் சொல்லும்போது மகிழ்ச்சி அடைந் தார்கள் முன்னைய தாய்மார்கள். பிள்ளைகளை நல்லவர் களாகவும் திறமைசாலியாகவும் வளர்த்து ஆளாக்குவதற்கு தாய்மாருக்கு சிறந்த அறிவு வேண்டும். இந்தக் காலத்திலே பிள்ளைகள் ஆங்கிலம் பேசினால் அகமகிழ்கிறார்கள் சில தாய்மார்கள். இப்படியானவர்களின் பிள்ளைகளின் எதிர்காலம் சீரழிவுக்குள் தள்ளப்பட்டுவிடும்.

சமயத்தை வாழ்க்கையில் இருந்து வேறுபடுத்தக் கூடாது. வாழ்க்கையும் சமயமும் சேரும்போது தான் அமைதி ஆனந்தம் உயர்வு எல்லாம் நமக்கு கிடைக்கிறது. கோவில் வழிபாட்டிலிருந்து மேலும் உயர்ந்த நிலைக்குச் செல்லவேண்டும். மனமாகிய உய்ர்ந்த கருவியை தூய்மைப் படுத்தி இதயத்திலே வீற்றிருக்கும் இறைவனை அறிய முயலவேண்டும்.

பொய் சொல்வதனால் நம்மை நாம் ஏமாற்று வதோடு மனம் அழுக்காகி இறைவன் நம் அருகே வராதபடி நாமே தடை போடுகிறோம். பொய் சொல்லிப் பழகுவதால் நல்ல குணமும் பண்பும் நம்மை விட்டு நீங்குகிறது. ஒழுக்கம் இல்லாதவர்க்கு அமைதி கிடைக்குமா? மன அடக்கம் மனத்தூய்மை ஒழுக்கம் இவையெல்லாம் இறை வனை அடையும் வழிகள். நல்லது எது கெட்டது எது என அறியும் அறிவை வளர்த்துக் கொள்ள வேண்டும். நெல்லுக்கு நீரை இறைத்தால் பயன்கிடைக்கும் ஆனால் புல்லுக்கு இறைத்தால் என்ன பயன்? அதே போன்று நலகாரியங்களுக்கு பணத்தை செலவு செய்தால் அது பெரிய பயனைத் தருகிறது. அதனால்தான் பெரியவர்கள் தானம் செய்வதை வலியுறுத்தினார்கள். தானம் செய்வதை எல்லா மதங்களும் வலியுறுத்துகின்றன. சமயம் வாழ்வின் அச்சாணியாக இருக்கிறது. சமயத்தின் மிக முக்கியமான பகுதி ஒழுக்கமே. இதைத்தான் ஔவையார் முதல் வாக்கியமாக அறம் செய்ய விரும்பு என்றும். வள்ளுவர் 'அந்தணன் என்போன் அறவோன்' அதாவது ஒழுக்கம் உள்ளவன் தான் அந்தணனாகும் தகுதியைப் பெறுகிறான் என்றும் வலியுறுத்துகிறார்.

நாம் ஆலய வழிபாட்டோடு மட்டும் நின்றுவிடாமல் நல்லறிவாகிய சமய அறிவைப் பெற்று நமது மனதை ஒழுக்கவழிகளால் தூய்மைப்படுத்தி உயர்ந்த வாழ்வு வாழவேண்டும். அந்தணர்கள் அறவோராக வாழவேண்டும். நாம் அந்தணர்கள் மூலமாக பல சடங்குகளைச் செய்விக் கிறோம். அவர்களுக்குத் தானமும் வழங்குகிறோம். அந்த ணர்களுக்குத் தானம் வழங்கவேண்டும் என சாஸ்திரங் களும் வலியுறுத்துகின்றன. ஆனால் அந்தணர்கள் தமக்கு இவ்வளவு தொகை தரவேண்டும் என்று கேட்டு வாங்கும்படி எந்த சாஸ்திரங்களிலும் கூறப்படவில்லை. கேட்டு வாங்கும் அந்தணனுக்கு தானம் வழங்கினாலே நாம் சாஸ்திரங்களை அவமதித்த பாவத்துக்கு ஆளாகிறோம்.

எந்த அந்தணனாவது சடங்குகளிலே தான் ஓதும் வேத மந்திரங்களுக்கு விலை பேசுவானானால் அந்தச் சடங்கு திருமணமாகட்டும், அல்லது சிரார்த்தமாகட்டும் பாவச்சடங்குகளாகும். அதிலே ஒரு நன்மையும் விளை யாது. கொடுப்பதை மகிழ்வோடு வாங்கும் அந்தணனே அறவோன் ஆவான்; அவனே தனது குலஒழுக்கத்தை மீறாதவன். இப்படிப்பட்ட ஒழுக்கம் உள்ள அந்தணனால் ஓதப்படும் வேத மந்திரங்களும் சடங்குகளும் புனிதமானவை களாகவும் பயன் உள்ளதாகவும் அமையும்.

தனது சேவைக்கு விலைபேசும் அந்தணர் பூநூல் அணிந்திருந்தாலும் அவன் வைசியனே. இப்படியானவர் களுக்கு நாம் மரியாதை கொடுப்பது சாஸ்திரங்களை அவமதிப்பதாகும். அறம் ஆகிய நல்ஒழுக்கத்தோடும் வைதீகத்தோடும் வாழும் அந்தணர்களை மதித்து மரியாதை செலுத்தி தானம் வழங்கி அவர்களை வணங்கும்போது நாம் நன்மையடைகிறோம்.

கேட்டு வாங்குபவன் அந்தணன் அல்ல என்ப தையும் கொடுப்பதை வாங்குபவரே வணக்கத்துக்குரிய அந்தணர் என்பதையும் நாம் தெளிவாக அறிந்து நடப்போமானால் சமய வளர்ச்சிக்கும் சமூக வளர்ச்சிக்கு நாம் பெருநன்மை செய்தவர்களாவோம்.

ஆலயம் தொழுதால் மட்டும் போதுமா? அறம் எனும் ஒழுக்க நெறியில் வாழ்வைச் சீர்படுத்தும் போதுதான் சமயத்தை பயன்படுத்துகிறோம். சமயம் அறிவுறுத்தும் ஒழுக்க(அற) நெறிகளை கடைப்பிடிப்பதால் மட்டுமே வாழ்வு விலங்கு நிலைக்கு தள்ளப்படாமல் மனித நிலையில் இருந்து தெய்வநிலைக்க உயருகிறது. பல மூடநம்பிக்கை களை மக்கள் கடைப்பிடித்துவருகிறார்கள். பல பிராமணர் களும் பல ஆலய நிர்வாகிகளும் பணத்தை மக்களிடம் இருந்து பிடுங்குவதிலே கண்ணாயிருக்கிறார்கள். அப்பாவி மக்கள் உண்மையை அறியாது சமயங்களால் ஏமாற்றப் படுகிறார்கள். மக்கள் உண்மைக்காக முயல்கிறார்கள். ஆனால் வேடதாரிகளோ ஏமாற்றுகிறார்கள். பிறருக்கு உதவாமை, சுயநலம், தானம் செய்யாமல் சொத்து சேர்த்தல், சீதனத்துக்கு பேரம்பேசல் போன்ற சீர்கெட்ட

பழக்கங்களே நம்மிடத்தில் மிஞ்சி நிற்கிறது. இந்த சீர்கெட்ட பழக்கங்களால் ஏற்பட்ட விளைவே நமது சொந்த மண் பேரழிவைப் பெற்றிருக்கிறது. நமது ஒழுக்கக் கேட்டின் பிரதிபலிப்பே இன்றைய நமது சமூகத்தின் நிலை. மனிதரை மதிக்காத மனித இனமாக வாழ்ந்த சமூகத்தை வேறு சமூகம் மதிக்குமா? ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் இறைவன் இருக்கிறானே இதை அறியாமல் ஏழைகளுக்கு நல்வாழ்வு கொடுக்காமல் விக்கிரகங்களுக்கு அபிஷேகமும் லட்சக் கணக்கில் செலவு செய்து திருவிழாக்களும் நடாத்தினோமே சொந்தமண்ணில் இன்று நடப்பது என்ன? நாம் கண் இருந்தும் குருடர்களாக வாழ்ந்து விட்டோம். நாம் ஒரு மனிதனை வெறுக்கும் போது இறைவன் பல அடிதூரம் நம்மை விட்டு விலகுகிறார். தர்மம் விலகும்போது பேரழிவு ஏற்படுகிறது. 'அரசன் எவ்வழி குடிகள் அவ்வழி' பாராளுமன்ற உறுப்பினர்களே நமக்கு அரசர்களுக்குச் சமமானவர்களாக இருந்தார்கள். எப்போது அநீதியை நீதி என்று வாதடும் சட்ட அறிஞர்கள் நமக்கு தலைவர்களாகும் நிலை ஏற்பட்டதோ அப்போது நம்மிடத்தில் எஞ்சியுள்ள தர்மமும் விலகிவிட்டது.

நாம் இனிமேலாவது விழித்துக் கொள்ள வேண்டும். அதர்மம் எனும் பிடியில் சிக்கி வாழ்ந்து கொண்டிருக்கிறோம். நாம் எங்கு வாழ்ந்தாலும் உண்மையை அறியாமல் வாழ்ந்தோமானால் மேலும் சீரழிவுகளுக்குள் தள்ளப்பட்டு விடுவோம்.

"சிறப்பீனும் செல்வமும் ஈனும் அறத்தினூங்கு
ஆக்கம் எவனோ உயிர்க்கு"

என வள்ளுவர் அறத்தின் முக்கியத்துவத்தை கூறுகிறார். ஒருவர்க்கு சிறப்பும் செல்வமும் நிலையாக அமைய வேண்டுமானால அறம் எனும் ஒழுக்கத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். ஒழுக்கம் இல்லாதவர்களின் புகழும் செல்வமும் அழிவிற்கேதுவாகும்.

ஒழுக்கம் இல்லாதவர்கள் அந்தணரோடும் ஆலய நிர்வாகிகளோடும் நட்பு வைத்தாலும் அபிஷேகமும், திரு விழாக்களும் செய்தாலும் என்ன பயன்? இறைவனை ஏமாற்ற முடியுமா? நாம் மேலும் ஒவ்வொரு படியாக முன்னேற வேண்டும். நமக்கு வீடும் ஆலயம் தான். வீட்டை தூய்மையாக வைத்திருந்து நல்ல எண்ணங் களோடு வாழும்போது இறைவன் மகிழ்ச்சியடைகிறார். உடலைத்தூய்மையாக வைத்து உள்ளத்திலே நல்ல உணர்வுகளை ஏற்படுத்தும்போது இறைவன் மகிழ்ச்சி அடைகிறார். பிறருக்கு சேவை செய்யும்போது இறைவன் அகமகிழ்கிறார். ஒவ்வொரு மனிதரின் உடல்களும் இறைவனின் ஆலயங்களே!

'உள்ளம் பெரும் கோவில் ஊனுடம்பு ஆலயம் தெள்ளத் தெளிந்தார்க்கு சீவன் சிவலிங்கம்' என திருமந்திரம் வலியுறுத்துகிறது.

**நாம் இனிமேலும் உண்மையை அறியமுடியாமல் மூடர்களாக வாழவேண்டுமா?**

அன்பே சிவம்! சீவனே சிவலிங்கம்! பிறரை வெறுத்தால் சிவனை வெறுக்கிறோம் என்பதை அறியாத மூடர்களாக வாழவேண்டுமா?

'தெள்ளத் தெளிந்தார்க்கு சீவன் சிவலிங்கம்' தாழ்ந்தவன் உயர்ந்தவன் என்ற பேத மெல்லாம் முட்டாள்களின் முளையிலே தான் உதயமாகின்றது. எல்லா சீவன்களிலும் சிவமாக இறைவன் இருக்கிறான் என்று உணராதவர்கள் தாழ்ந்தவர்களே. தமிழர்களாகிய நாம் தாழ்ந்தவர்களாக வாழ வேண்டுமா?

யாழ் சண்முகத்தார் மைந்தன்

---

**6ம் பக்கத் தொடர்ச்சி**

'உலகெலாம் அன்புமேவி ஒரு குலமாக வாழ்க!
கலகமும் துயரும் வீழ்க கருணையும் களிப்பும் பொங்க
நலமெலாம் விளைய ஞான ஞாயிறு பொலிய நாளும்
இலகுவாய் சுத்த ஜோதி இறைவனே போற்றி போற்றி!'
– கவியோகி சுத்தானந்த பாரதியார்

'வான்முகில் வழாது பெய்க மலிவளம் சுரக்க மன்னன்
கோன்முறை அரசு செய்க குறைவிலாது துயிர்கள் வாழ்க
நான்மறை அறங்கள் ஓங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்'
– கந்த புராணம்

தங்கள் அன்பு நன்கொடைகளை காசு ஓலைகளை MURUGAN TEMPLE OF NORTH AMERICA என்று எழுதி

C/O T.SRISKANDARAJAH
9002 STONE WALL ROAD
MANASSAS VA 20110-2557, U.S.A

அனுப்பும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறது பெற்றுக்கொண்டதும் நன்றியுடன் பற்றுச்சீட்டு அனுப்பப்படும்.

**DIRECTION TO TEMPLE:**

From Washington / Fairfax take beltway (Rt. 495) and take exit 20 A and follow the sign to princess Garden Pkwy. At the traffic light make a left turn and then make a right turn on to Princess Garden Parkway. Make a left at 6300 Princess Garden Pkwy to the temple

From Baltimore take Rt. 1-95 South which will merge with merge with 495. Thereafter follow the direction given from Washington.

# சிறுவர் பகுதி

## வளரும் சத் சங்கம்

அருமைக் குழந்தைகளே எதிர்காலத்திலே நீங்கள உயர்ந்த சாதனை படைக்கப் போகிறீர்கள்! மனதை ஆளக் கற்றுக் கொண்டவர்கள் தான் உலகை ஆளமுடியும். கெட்ட எண்ணங்களும் தீய பழக்கங்களும் எமது மனதை அடிமை கொள்ளாமல் நாம் கவனமாக இருக்க வேண்டும். நாம் நல்ல பழங்கங்களைப் பழகிக் கொள்ள வேண்டும். எப்போதும் நல்லவர்களாக வாழவேண்டும்.

நல்ல பழக்கங்கள் எமது மனதை பண்படுத்துகிறது. அதாவது மனதை ஒழுக்கம் உள்ள தாக்குகிறது. பண்டைய காலத்திலே எமது மூதாதையர்கள் ஒழுக்கத்தோடு வாழ்ந்தபோது உலகிலே மிகச் சிறப்பான இனமாகவும் உயர்ந்த நாகரீகமுள்ள இனத்தவராகவும் வாழ்ந்தபோது உலகிலே மிகச் சிறப்பான இனமாகவும் உயர்ந்த நாகரீகமுள்ள இனத்தவராகவும் வாழ்ந்தார்கள். இனிமேல் நாம் ஒவ்வொருவரும் பிறர் மதிக்கும் வண்ணம் ஒழுக்கம் பண்பு உள்ளவர்களாகவும் ஒற்றுமை உள்ளவர் களாகவும் வாழவேண்டும்.

### ஒழுக்கம்

ஒழுக்கத்தைப்பற்றி பெரியவர்கள் மிகச் சிறப்பாக நமக்குச் சொல்லியுள்ளார்கள். 'அறம் செய்ய விரும்பு' என ஒளவையார் நமக்குச் சொல்கிறார். 'அறம்' என்பது உயர்ந்த ஒழுக்கமுறைகளே சிறந்த குடும்ப ஒழுக்கத்தை இல்லறம் என்றும் துறவிகளின் ஒழுக்கத்தை துறவறம் என்றும் சொல்லப்படுகிறது. நல்லதைச் செய்ய விரும்பு வர்களால் தான் நல்லதைச் செய்ய முடியும். சிறுவயதிலே நாம் நல்லதைச் செய்யப்பழக வேண்டும்.

பூமி சூரியனை சுற்றி வருகிறது. ஒவ்வொரு வருடமும் சூரியனைச் சுற்றி வரும்போது புறப்பட்ட இடத்துக்கே வந்து சேருகிறது. சரியாக சூரியனைச் சுற்றி ஒரு வட்டம் போடுகிறது. அதே மாதிரித்தான் நாம் செய்கின்ற காரியங்களும் வட்டம் போட்டு மீண்டும் நம்மிடம் வந்து சேரும். இதைத்தான் பெரிவர்களும் ஞானிகளும் நாம் நன்மை அடைய வேண்டும் என்ற காரணத்தால் நல்லதை (ஒழுக்கத்தை) (அறத்தை) செய்யும்படி கூறினார்கள்.

### ஒற்றுமை

நாம் தீமை (கெடுதல்) செய்தால் எதிர்காலத்தில் கஷ்டத்தை அனுபவிப்போம். நாம் நன்மை செய்தால் எதிர்காலத்தில் நன்மையை அனுபவிப்போம் சுயநலம் எங்களை தர்மத்திலிருந்தும் உயர்ந்த ஒழுக்கத்திலிருந்தும் விலக்கி விடுகிறது.

தனித்தனியாக இருக்கும் புல்லை கயிறாகத் திரித்தால் ஒரு யானையை கட்டிவிடலாம். அதே போன்று நாம் சுயநலம் இல்லாமல் ஒன்று சேரும்போது நாம் உயர்வடையமுடியும். எல்லோரும் பெருநன்மை பெற்று வாழலாம்.

பிள்ளைகளே நீங்கள் பிறரோடு அன்பாகவும் பிறருக்கு உதவி செய்பவர்களாகவும் வாழ்வீர்களானால் எதிர்காலத்தில் நீங்கள் பலராலும் போற்றப்படுவீர்கள். சிறப்பான வாழ்க்கை உங்களுக்கு கிடைக்கும். சுயநலம் உள்ள அறிவு குறைந்தவர்கள் உங்களைப் பார்த்து திருந்து வார்கள்.

'தெள்ளத் தெளிந்தார்க்கு சீவன் சிவலிங்கம்' என்கிறார் திருமூலர் எனும் மகாமுனிவர். சிவனாகிய இறை வன் எல்லா உயிர்களிலும் இருக்கிறார் என்பதை தெளிவுபெற்ற அறிவுடையவர்களால் உணரமுடிகிறது. எல்லா மனிதர்களினுள்ளும் இருந்து கொண்டு இறைவன் நம்மைப் ப்ார்க்கிறார். நாம் பிறருக்கு சேவை செய்வதால் இறைவன் மகிழ்கிறார். நாம் பிறரோடு அன்பாகப் பழகுவதால் இறைவன் மகிழ்கிறார். நாம் நல்லதைச் செய்வதாலும், நல்லவர்களாக வாழ்வதாலும், பிறருக்கு சேவை செய்வதாலும் இறைவன் பலமடங்கு மகிழ்கிறார். தேவைகளை இறைவனே நிறைவேற்றுவார். எமக்கு அமைதி ஆனந்தம் நல்வாழ்வு எல்லாம் இறைவனால் கிடைக்கும்.

### பெரியோரை மதிக்கவேண்டும்

பிறர் நலத்தை நினைப்பவர்கள் மனதில் இறைவன் வெளிப்படுகிறார். இப்படியான பெரியவர்களை மரியாதை செய்பவர்களின் வணக்கத்தை நேரடியாக இறைவனே ஏற்றுக்கொள்கிறார். பெரியவர்களை மதிக்க வேண்டும்.

# சிறுவர்களுக்கான மகாபாரதம்

தொடர்ஆக்கம்

தொகுப்பு: வே. கணேஸ்வரன், தலைவர், ஸ்ரீ ராமகிருஷ்ண சேவாச்ரமம்



சென்ற இதழ் தொடர்ச்சி

## 5. பீஷ்மர்

ஒரு நாள் கங்கைக் கரையில் சந்தனு மன்னன் தான் அம்பெய்த மான் ஒன்றைத் தேடியபடி நடந்து கொண்டிருந்தான். அப்போது கங்கையாற்றில் பேரதிசயம் ஒன்றை அவன் கண்ணுற நேர்ந்தது. பதினாறு வயது மதிக்கத்தக்க அழகிய வாலிபன் ஒருவன் கங்கையின் குறுக்கே அம்புகளால் அணை ஒன்று கட்டிக் கொண்டிருப்பதையும் அதனால் கங்கை நதியின் போக்குத் தடைப்படுவதையும் கண்ட மன்னனுக்குத் வியப்புத் தாளவில்லை. கங்கையே தடுத்து விடக்கூடிய இந்த இளைஞன் யாராக இருக்கக்கூடும் என்று யோசித்தவாறே நின்றிருந்தான் சந்தனு. அப்போது கங்கை அங்கே தோன்றி சந்தனுவிடம். 'மன்னா, இந்த இளைஞன் வேறு யாருமல்ல, உங்கள் எட்டாவது மகனே இவன். இவனை நான் மிகவும் பேணி வளர்த்துள்ளேன். வசிஷ்டரிடம் வேதங்களை யெல்லாம் கற்றுள்ளான் இவன், அம்பு எய்வதில் இந்திரனுக்கு நிகரானவன். மன்னனது கடமைகளையும் திறம்பட ஆற்றும் ஆற்றல் பெற்றவன்' என்று கூறி அந்த வாலிபனை சந்தனுவிடம் ஒப்படைத்துவிட்டு அங்கிருந்து மறைந்தாள். கங்கதத்தன் அல்லது தேவவிரதன் என்று கூறப்படும் தன் மகனுடன் நாடு திரும்பினான் சந்தனு.

நான்கு ஆண்டுகள் உருண்டோடின. ஒரு நாள் யமுனை நதிக்கரையில் உலாவிக் கொண்டிருந்தான் சந்தனு. அங்கே அழகிய மங்கை ஒருத்தியைக் கண்டான். முனிவர் ஒருவர் கொடுத்த வரத்தால் அவளது உடலிலிருந்து கிளம்பிய நறுமணம் காடு முழுவதும் நிறைந்தது. அவளை நெருங்கிய சந்தனு. 'அன்பே நீ யார்? இங்கு என்ன செய்கிறாய்? என்று கேட்டான். அதற்கு அவள் 'என் பெயர் சத்தியவதி. என் தந்தை இங்குள்ள செம்படவர்களின் தலைவர். படகோட்டுவது என் பணி. யாத்திரிகர்களைப் படகில் கொண்டு அக்கரை சேர்ப்பதன் மூலம் புண்ணியம் தேடிக்கொள்கிறேன்' என்றாள் அவள். அவள் யாராக இருந்தாலும் அதைப்பற்றி சந்தனுவிற்குச் சிறிதும் கவலை இருக்கவில்லை. அவளை எப்படியாவது திருமணம் செய்து கொள்ள எண்ணிய அவன் நேராக அவளது தந்தையிடம் சென்று அதைப்பற்றிக் கேட்டான். செம்படவர்த் தலைவன் சந்தனுவின் கோரிக்கைக்கு இணங்கினான். ஆனால் திருமணத்திற்கு நிபந்தனை ஒன்றை விதித்தான். 'அரசே உங்கள் விருப்பம் எனக்கு மிகவும் மகிழ்ச்சியைத் தருகிறது. ஆனால் அவளது எதிர்கால நலனிற்காக நிபந்தனை ஒன்றைத் தங்கள் முன்வைக்க வேண்டியவனாக உள்ளேன்.' என்று பணிவுடன் கூறினான். சத்தியவதியின் அழகில் மயங்கியிருந்த சந்தனு எந்த நிபந்தனையாயினும் ஏற்றுக்கொள்ளச் சித்தமாயிருந்தான்.

'சத்தியவதிக்குப் பிறக்கும் குழந்தையைத் தங்கள் வாரிசாக ஏற்றுக்கொள்வதானால் தாங்கள் சத்தியவதியை மணப்பதில் எனக்கு எந்தவித ஆட்சேபணையும் இல்லை' என்பதே செம்படவர் தலைவனின் நிபந்தனை. இந்த

நிபந்தனை சந்தனுவைத் திடுக்கிட வைத்தது. தனது ஆசைக்கு தேவவிரதனைப் பலியாக்க அவனது உள்ளம் ஒப்பவில்லை. மனச்சோர்வுடன் அரண்மனை திரும்பினான். அவன் இந்த மனவேதனையை யாரிடமும் தெரிவிக்காமல் அதனை எண்ணியெண்ணித் தன்னுள்ளே மனம் குமைந்து கொண்டிருந்தான் சந்தனு.

எவ்வளவு தான் மறைத்தாலும் தந்தையின் கவலையை தேவவிரதன் கவனிக்கத் தவறவில்லை. அவன் தந்தையை அணுகி தந்தையே தாங்கள் இப்போதெல்லாம் மிகவும் மனவாட்டத்துடன் காணப்படுகிறீர்கள். உங்கள் மனத்துயரத்திற்குக் காரணமென்ன? அதனை நிவர்த்திக்க நான் தயாராக இருக்கிறேன்' என்று கூறினான். ஏதேதோ காரணங்களைக் கூறி உண்மையை மறைக்க முயன்றான் மன்னன். ஆனால் சந்தனு கூறிய எந்தக் காரணமும் உண்மையல்ல என்பது தேவவிரதனுக்குப் புரிந்தது. மந்திரியிடமிருந்து உண்மையை அறிந்து கொண்ட அவன் மந்திரிகளையும் பிற தலைவர்களையும் அழைத்துக் கொண்டு நேராக செம்படவர் தலைவனிடம் சென்று தந்தைக்காக சத்தியவதியைப் பெண்கேட்டான். சந்தனுவிடம் சொன்ன அதே நிபந்தனையை தேவவிரதனிடமும் சொன்னான் அந்த செம்படவத் தலைவன்.

தந்தையின் மகிழ்ச்சிக்காக எதையும் துறக்கச் சித்தமாக இருந்த தேவவிரதன் அந்த நிபந்தனையை எவ்வித தயக்கமுமின்றி ஏற்றுக்கொண்டான். அதனைக் கேட்ட செம்படவத் தலைவன் மகிழ்ந்தாலும் சந்தேகம் நீங்கவில்லை. எனவே அவன், தேவவிரதனிடம் தேவவிரதா, உனது உறுதிமொழி உண்மையிலேயே மெச்சத் தகுந்ததுதான். ஆயினும் இதனை உன் குழந்தைகளும் ஏற்று அதன்படி நடப்பார்கள் என்பது என்ன நிச்சயம்? என்று கேட்டான்.

தேவவிரதனின் பண்பட்ட உள்ளம் தந்தைக்காக எந்தத் தியாகத்தையும் ஏற்கச் சித்தமாக இருந்தது. தன்னால் தந்தையின் மகிழ்ச்சி குலையக்கூடாது என்பதில் உறுதியாக இருந்த அவன், 'அப்படியானால் கேளுங்கள் இதோ இங்கு நிற்கும் பெரியோரும் சான்றோரும் சாட்சி, வானும் மண்ணும் சாட்சி, இந்தக் கணம் முதல் நான் எனது அரசுரிமையைத் துறக்கிறேன். அதுமட்டுமன்றி இந்தப் பிறவி முழுவதும் பிரமச்சாரியாகவே காலம் கழிப்பேன் இது உறுதி' என்று ஆவேசத்துடன் கூறினான்.

இதனைக் கேட்ட செம்படவர் தலைவன் மகிழ்ச்சியால் பூரித்தான். வானிலிருந்து தேவர்களும் முனிவர்களும் மலர் தூவி வாழ்த்தினார்கள். 'பீஷ்மர், பீஷ்மர் என்ற பேரொலி எங்கும் நிறைந்தது. பயங்கரமான சபத்தை மேற்கொண்டவன் என்ற பொருள்படும். பீஷ்மர் என்ற பெயராலேயே தேவவிரதன் அன்றிலிருந்து அழைக்கப்பட்டான்.

அதன் பின்னர், சத்தியவதியை அழைத்துக் கொண்டு அஸ்தினாபுரம் திரும்பினார் பீஷ்மர். நடந்தவை அனைத்தையும் கேள்வியுற்ற மன்னனால் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளமுடியவில்லை. மகனின் தன்னலமற்ற அன்பு சந்தனுவின் உள்ளத்தை உலுக்கி விட்டது. சந்தனு பீஷ்மரைத் தழுவியவாறே, அன்பு மகனே இன்று நான் உனக்கு வரமொன்று தருகிறேன். நீ மரணத்தை வென்றவனாகத் திகழ்வாய். நீ விரும்பும்போது மட்டுமே மரணம் உன்னைத் தொடமுடியும்' என்று கூறினான். சந்தனு சத்தியவதி திருமணம் சிறப்பாக நடந்தேறியது.

தொடரும்.......

## அம்மா அப்பா குரு மூவரும் முதல் தெய்வங்கள்

எம்மை பத்து மாதங்கள் சுமந்து பல கஷ்டங்களையும் தாங்கி வளர்க்கும் அன்னைதான் ஒவ்வொரு மனிதரும் வணங்கவேண்டிய முதல் தெய்வம். உலகிலே விலை மதிக்க முடியாததும், உயர்ந்த தெய்வீகம் பொருந்தியதும், தாய்மையும் தாய் அன்பும் தான். ஒவ்வொரு நாளும் தாயை வணங்குபவர்கள் உயர்ந்த வாழ்வையும் சிறப்பை யும் பெறுவார்கள். தாயின் ஆசீர்வாதம் நம்மை எல்லா கஷ்டங்களிலுமிருந்தும் விடுவிக்கும்.

நீங்கள் தினமும் சக்தியாகிய அம்மாவை வணங்கவேண்டும். தாயை விட சிறந்த ஆலயம் எங்காவது இல்லை. தந்தை உங்களை பாதுகாத்து வளர்க்கிறார். உங்கள் தேவைகளை அவரே நிறைவேற்றுபவர். எனவே சிவனாகிய அப்பாவையும் தினமும் காலைத் தொட்டு வணங்கவேண்டும். அம்மா, அப்பாவை வணங்கும் பழக்கும் உள்ளவர்களுக்கு எல்லா நன்மைகளையம் இறைவன் கொடுப்பார்.

அம்மாவும் அப்பாவும் உங்களை வசதியோடு வளர்க்கிறார்கள். ஆனால் குருவின் நற்போதனைகளால் தான் நீங்கள் நல்ல பிள்ளைகளாகவும், நல்லவர்களாகவும் வாழமுடியும். குருவின் ஆசீர்வாதம தான் உங்களுக்கு வளமான வாழ்க்கை தருகிறது. எனவே உங்கள் அம்மா, அப்பா உங்களுக்கு நல்ல குருவிடம் சமயபோதனைகள் பெற அனுப்புவார்கள், அந்த நல்ல போதனைகளை உங்களுக்கு சொல்லித்தரும் குருவை நீங்கள் வணங்கவேண்டும்.

அம்மா, அப்பா, குரு மூவரையும் வணங்கும் பாக்கியம் கிடைப்பவர்களுக்கு வாழ்வில் எல்லா நன்மைகளும் கிடைக்கும் வேதாந்த ஞான மன்றத்தில் சமயம், தமிழ் படிக்கும் 200 வரையிலான மாணவர்கள் அம்மா, அப்பா, குரு மூவரையும் வணங்கி வருகிறார்கள். மதம் வாசகர்களாகிய நீங்களும் எமது வேதாந்த ஞான மன்ற சமயப் பள்ளிக் கூடத்தில் படிக்கும் எல்லாச் சிறுவர்களும் எதிர்காலத்தில் சகல நன்மைகளும் பெற்று வாழ்வீர்கள்.

# வேதாந்த ஞானமன்றம் ரொரன்ரோவில் என்ன செய்கிறது?

1994ஆம் ஆண்டு மாசி மாதம் திரு. சின்னையா கருணானந்தன், திரு. க. தம்பிராசா (அபிராமி அச்சக உரிமையாளர்) அடியார் விபுலானந்தா ஆகிய மூவராலும் அபிராமி அச்சகத்தில் (எக்ளின்ரன் அன் மிட்லான்ட், ஸ்காபரோ) ஒன்று கூடி கனடா ஞானமன்றம் எனும் மன்றத்தைக் கூட்டினோம். வெளியிடப்போகும் புத்தகத்துக்கு பல பெயர்கள் தெரிவு செய்ததில் (மதம்) எனும் பெயர் தெரிவாகியது. மதம் என்னும் பெயரைப்பற்றி அன்புக்குரிய ஆசிரியர் திரு. மா. அலெக்சாந்தர் அவர் களிடம் கூறியபோது 'ச' எனும் எழுத்து வரக் கூடியதாக வைத்தால் நலம் என்ற கருத்தை தெரிவித்து சம்மதம் எனும் எழுத்தைப் போடச் சொன்னதின் பேரில் **'மதம்'** சம்மதம் ஆகியது.

மதம் வெளிவருவதைப் பற்றிய துண்டுப்பிரசுரம் அபிராமி அச்சகத்தில் அடிக்கப்பட்டு அதற்குரிய பணம் அடியாரால் திரு. தம்பிராசாவிடம் கொடுக்கப்பட்டது. திரு. கருணானந்தனுடன் இரண்டு நாட்கள் விளம்பரம் சேகரிப்ப தற்காக அவரது வாகனத்திலே அடியாரும் சென்று சில விளம்பரங்கள் சேகரிக்கப்பட்டது. அதன் பிறகு திரு. கருணாவினால் உதவி செய்யும் சந்தர்ப்பம் கிடைக்க வில்லை. மதம் முதலாவது இதழை அச்சேற்றுவதற்கு அபிராமி அச்சகத்தில் அச்சடிக்க தீர்மானித்ததும் அதற்கான வேலைகள் நடைபெறத்தாமதமாகியது. இதற் கான காரணம் என்னவென்று திரு. தம்பிராசா ஒருவருக்குத் தான் தெரியும்.

புத்தகம் அச்சாவதை தாமதிக்கிறீர்கள் அப்படி யானால் நான் வேறு அச்சுக்கூடத்தில் அடிக்கலாமா? என்று அடியார் கேட்டபோது ஓம் என்று பதில் கூறினார் தம்பிராசா. மதம் முதலாவது இதழ் **P.M.J** அச்சுக்கூடத்தில் அச்சாகி 94ம் ஆண்டு சித்திரை புதுவருடத் தினத்தன்று பிள்ளையார் கோவிலில் அடியாரினால் தன்னம் தனியாக மக்களுக்கு விநியோகிக்கப்பட்டது. ஆரம்ப உறுப்பினர்கள் இருவராலும் பின்பு உதவி ஏதும் செய்ய முடியவில்லை. தொடர்ந்து இரண்டு வருடங்களில் ஏழு இதழ்கள் வெளியிடப்பட்டது. 95 வீதமும் அடியாரின் முயற்சியே. இன்று ஐயாயிரத்துக்கும் மேற்பட்ட உண்மையை அறிய விரும்பும் சிறந்த வாசகர்கள் மதம் சஞ்சிகைக்கு உண்டு.

நீண்ட இடைவெளிக்குப் பின் மதம் மீண்டும் வெளிவருகிறது. கனடா ஞானமன்றத்தின் மூன்று உறுப்பி னர்களில் இருவர் ஒத்துழைப்பு இல்லாமல் மன்றம் இயங்கவில்லை. மதம் சஞ்சிகை மட்டும் வெளிவந்து கொண்டிருந்தது. 16-03-97 அன்று பல சமய ஆசிரியர்களின் ஒத்துழைப்பின் பேரில் அடியாரினால் வேதாந்த ஞானமன்றம் ஆரம்பிக்கப்பட்டு இன்று இரண்டு பொது இடங்களிலும் ஆசிரியர்களின் இல்லங்களிலும் சிறு பிள்ளைகளுக்கு சமயமும், தமிழும் சொல்லிக் கொடுக்கின்றோம்.

97 கோடைகால விடுமுறையின்போது Eglinton Leslie யில் உள்ள Sunny Brook பூங்காவில் ஒன்றுகூடல் நடாத்தப்பட்டது. இது முற்றும் முழுதான புனித ஒன்று கூடலாக இருந்தது. இதில் மாணவர்களும் பெற்றோருமாக 300பேர் வரை கலந்து கொண்டார்கள். அடுத்து டவுன்ரவுனில் உள்ள கிருஷ்ணர் ஆலயத்தில் சரஸ்வதிப் பூஜை கொண்டாடப்பட்டது. அங்கு 400 பேர்வரை சமூகம் கொடுத்திருந்தார்கள். இன்று வேதாந்த ஞானமன்ற தமிழ்சமயப் பள்ளியில் 200 வரையிலான பிள்ளைகள் கல்வி பயில்கிறார்கள்.

மன்ற ஆசிரியர்கள் (குருமார்கள்) எல்லோரும் புதியமுறையில் சிறப்புப் பயிற்சி எடுத்து வருகிறார்கள்.

## குருதட்சணை

மாதம் மாதம் குருதட்சணையாக 10 டொலர்கள் அறவிடப்படுகின்றது. இலவசமாகப் கொடுப்பதும், வாங்குவதும் இழிவான குணமும், தர்மத்திற்குப் புறம்பானதும் **'ஏற்பது இகழ்ச்சி'** என்னும் பொன் வாக்கை நாம் எப்போதும் நினைவில் வைத்திருத்தல் வேண்டும் தர்மத்தைக் கடைப்பிடித்து வாழ்பவர்கள் எல்லா நலனும் பெறுகின்றார்கள். குருதட்சணை கொடுப்பது சிறந்த தர்மம்.

### எமது முக்கிய போதனைகள் நடைமுறை ரீதியானது.

1. தாய்தந்தை குரு மூவரையும் வணங்கும் பழக்கத்தை கற்றுக் கொடுத்து பழக்கத்தில் கொண்டுவரல்
2. பஜனை பாடுதல், முக்கிய வேதமந்திரங்களைக் கற்பித்தல், தேவாரங்களைக் கற்பித்தல்
3. தியானம் செய்யப்பழக்குதல், தியானம் செய்வதால் மன அடக்கம், மன ஒருமைப்பாடு, சிறந்த அறிவாற்றல் ஏற்படும்.
4. நல்ல அறிவுரைகள், நற்பழக்கங்கள், பெரியாரை மதித்தல், தர்மகாரியங்களில் விருப்பத்தை ஏற்படுத்தல் சமூகசேவைக்கு ஊக்குவித்தல் இதனால் நல்லவர்களாகவும், நல்ல வாழ்க்கையை அமைத்து உயர்வோடும் வாழ்வார்கள்.

5. தாய்மொழியை கற்றல் தமிழில் பேசும் ஆர்வத்தை வளர்த்தல்

6. பிள்ளைகளை நல்லவர்களாக்கி உயரவைப்பதே எமது முக்கிய குறிக்கோள்.

## பிள்ளைகளின் உயர்வுக்காகவே நாம் இந்தப் பள்ளிக்கூடப் பணியினைச் செய்கிறோம்.

'இளமையிற் கல்வி சிலையில் எழுத்து'

சிறிய வயதிலே நல்ல போதனைகளைப் பெறுவதால் கள்ளம் கபடமற்ற பிஞ்சுமனங்களிலே நற்குணங்கள் ஆழமாகப் பதிந்து வேரூன்றி தளைத்து வளரும். பிள்ளைப் பிராயத்திலே நல்ல போதனைகளைக் கொடுக்கத் தவறக் கூடாது. அதற்கு நல்ல குருவை பெற்றோர்கள் நாட வேண்டும். எமது ஆசிரியர்கள், குருவின் நிலைக்கு உயர்ந்து கொண்டிருக்கிறார்கள். எல்லா மாணவர்களையும் தங்கள் பிள்ளைகளைப் போல் அன்பு செலுத்தி போதனை செய்கிறார்கள். சிறந்த ஆன்மீகப் பயிற்சி பெற்று வருவதனால் நாளுக்கு நாள் உயர்ந்த மனஅடக்கமும் பண்பும் அவர்களிடமிருந்து தெய்வீகத்தை வெளிப்படுத்துகிறது. மனத்தூய்மை அடைந்து வரும் குருமாரை வணங்கி ஆசீர்வாதம் பெறும் மாணவர்கள் கெட்டிக்காரர்களாகவும் நல்ல பிள்ளைகளாகவும் வளருவார்கள். தாய் தந்தையருக்கு உதவும் சிறந்த பிள்ளைகளாக வாழுவார்கள்.

இன்று எல்லாப் பெற்றோரும் தங்கள் பிள்ளைகளின் எதிர்காலம் என்ன ஆகுமோ? என்று ஏங்கிக் கொண்டிருக்கிறார்கள், உண்மைதான். ஏனென்றால் ரொரன்ரோவிலே நாளுக்கு நாள் இளம்பிள்ளைகள் கெட்டுப்போய்க் கொண்டிருக்கிறார்கள்.

ஆனால் எமது மன்ற மாணவர்களின் பெற்றோர்கள் கவலைப்படவேண்டியதில்லை. நிச்சயம் எமது மாணவர்கள் எதிர்காலத்தில் உயர்ந்த நிலையை அடைவார்கள். அவர்கள் எல்லா நலனும் பெற்று வாழ்வார்கள். இறைவனுடைய பூரண ஆசிகளை இவர்கள் பெறுவார்கள் என்பதில் சந்தேகமில்லை. ஏனென்றால் தாய், தந்தை, குரு மூவரையும் வணங்கும் பிள்ளைகள் சகலசௌபாக்கியங்களையும் பெற்று வாழ்வார்கள். இது வேதங்களின் தீர்ப்பு.

## சத்சங்கம்

மன்றம் இரண்டு இடங்களில் சத்சங்கம் நடாத்துகிறது. ஒவ்வொரு புதன்கிழமைகளிலும் 6 மணிக்கு கென்னடி அன்ட் எல்ஸ்மெயர் சந்திப்பில் சாமி அன்சன்ஸிலும் (416)492-2235, கீல் அன்ட் எக்ளின்ரனிலும் (416)658-7957 நடைபெறுகின்றது. சத்சங்கத்திலே பஜனை, தியானம், ராஜயோக விளக்கங்கள் நாடிசுத்தி பிராணயாமப்பயிற்சி, ஆன்மீக சந்தேகங்களை தெளியவைத்தல் கேள்வி பதில் போன்றன நடைபெறுகிறது. பலர் சேர்ந்து பஜனை பாடுவதால் அவ்விடம் புனித அலைகளால் சூழப்படுகிறது. தியானம் செய்யும்போது மனம் ஒருமைப்பட்டு தெய்வீக உணர்வை நோக்கி செல்கிறது. கேள்விகளால் சந்தேகம் தெளிகிறது. இந்த நிலையிலே சத்சங்கத்தில் கலந்து கொள்வோர் அனைவரும் தெய்வீக உணர்வால் நிரப்பபடுகிறார்கள். அவர்களது தேவைகள் நிறைவேறிவருகிறது. மனதில் அமைதி ஆனந்தம் நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது.

சத்சங்கத்திலே இறைவனைச் சரணடைகிறோம். உண்மையை அறிய ஆவல் கொண்டவர்களுக்காக அவர்களின் பிரார்த்தைனையின் பேரில் இறைவனால் தூண்டப்பட்டு செயல்படுவதே வேதாந்த ஞானமன்றம் நடாத்தும் சத்சங்கம். **அமைதியும், இன்பமும் பணத்தால் வாங்கமுடியாது. அது நமக்குள்ளேதான் இருக்கிறது. இதை உங்களுக்குள்ளே கண்டு அனுபவிப்பதற்கு சத்சங்கம் உதவுகிறது.**

## எதிர்காலத் திட்டங்கள்

மக்களுக்கு எது நன்மை அளிப்பதோ எது உயர்வளிப்பதோ, எது உண்மையில் தேவையோ, அதை பெறுவதற்கான சேவைகளே எமது எதிர்காலத்திட்டங்கள்.

## எமது நோக்கங்கள்

மன்றத்தை விளம்பரப்படுத்தலை தவிர்த்தல்! ஆனால் முற்றிலும் நாம் விரும்புவது செயல்பாடு! எமது சேவைகள் அனைத்தும் இறைவனுக்கே அர்ப்பணம் செய்கிறோம். நாம் வேண்டுவது அன்பு! அதுதான் சிவம்! அந்த அன்பாகிய சிவனை எல்லோருக்குள்ளும் வெளிப்படச் செய்வதே எமது நோக்கம். தூய அன்பு என்பது எதையும் எதிர்பார்ப்பதில்லை. அந்த தூய அன்பாகிய சிவனுக்கே நாம் தொண்டு செய்கிறோம். அந்த அன்பே (சிவம்) நுணுக்கரிய நுண்ணுணர்வாக எல்லோர் உள்ளங்களிலும் உறைகிறார். அதனால் நாம் எல்லோருக்கும் தொண்டு செய்யும் உள் உணர்வோடு செயல்படுகிறோம்.

இறை உணர்வோடு நாம் தொண்டு செய்கின்றோம். உண்மையை உள்ளபடி அறியச் செய்வதே உண்மையான மதம். சிறியவர் முதல் முதியோர் வரை அவரவர் ஆற்றலை வெளிப்படச்செய்வதே எமது நோக்கம்.

தாய் அன்போடு மாணவர்களை தங்கள் பிள்ளைகளைப் போல் அன்போடு நேசித்து நற்போதனை வழங்கும் ஆசிரியமணிகளுக்கு சிறப்போடு அன்னை எனும் நாமத்தைக் கொடுக்கிறோம். இவர்களது சேவை மிகவும் தெய்வீகமானது.

**நீ உன்னை அறிந்து கொள்ளும் வரையும் உன்னை துன்பம் தொடர்கிறது. நீ உன்னை அறிந்து கொண்டால் இன்பம் உன்னைத் தொடரும். நீ ஆன்மா என்பதை ஏன் அறிய முடியவில்லை?**

# வேதாந்த ஞான மன்றம் - கனடா (நவம்பர் 1997ல்)

## இந்து சமயம் தமிழ் போதிக்கும் ஆசிரியர்(குரு)கள்



**முன்வரிசை இடமிருந்து வலம்:-**

அன்னை திருமதி மீனலோஜினி சுப்ரமணியம்,
அன்னை திருமதி ஜெயசோதி கணேசநாதன், (மன்ற உபதலைவர்),
திரு அடியார் விபுலானந்தா (மன்றத்தலைவர்),
அன்னை திருமதி லீலா வெற்றிவேற்கரசு(மன்றத் தனாதிகாரி),
அன்னை திருமதி சுகலெட்சுமி தர்மலிங்கம்(மன்றப் பொதுச்செயலாளர்)

**பின்வரிசை இடமிருந்து வலம்:-**

அன்னை திருமதி இந்திரா சிவராஜகுமார், அன்னை திருமதி சுந்தரேஸ்வரி சிவதாஸ், அன்னை செல்வி கௌசலை தர்மரத்தினம், அன்னை திருமதி பூங்கோதை பன்னீர்ச்செல்வம், அன்னை திருமதி நளாயினி குணரெட்ணம் (மன்ற உபசெயலாளர்), அன்னை திருமதி தவமணிதேவி பாலசுப்ரமணியம், அன்னை திருமதி கலாஜோதி உதயகுமார், அன்னை திருமதி அருந்ததி கருணாகரன் (மன்ற நிகழ்ச்சி இயக்குனர்)
அன்னை திருமதி வளர்மதி ஜெயகாந்தன் (மன்ற பத்திராதிபர்),
அன்னை திருமதி கோதை அமுதன் (மன்ற நிகழ்ச்சி இயக்குனர், பள்ளிக்கூட உபஅதிபர்)

## சமூகமளிக்காதோர்:-

குருக்கள் ஸ்ரீ ஹரி ஹர சர்மா, திரு. சாம்பசிவம் ஸ்ரீதரன், அன்னை திருமதி புஸ்பா துரைரட்ணம்(நிர்வாகச் செயலாளர்), அன்னை திருமதி பேரின்பவல்லி சண்முகம், அன்னை திருமதி தயாளமலர் மகாலிங்கம், அன்னை திருமதி இரஞ்சனிதேவி புலேந்திரராசா, அன்னை திருமதி நிர்மலாதேவி சிவராசகுமார், அன்னை திருமதி செந்தினி சிவகுமார், அன்னை செல்வி ராஜகுமாரி சுப்பிரமணியம்

## 2. பெற்றோர் வணக்கம்



திரு சாம்பசிவம் ஸ்ரீதரன் தம்பதிகளின் பிள்ளைகள் பாலாஜி, நந்திகா, குபேரன் மூவரும் பெற்றோரை வணங்குகிறார்கள்.



மன்றத்தின் பள்ளியின் முதன்முதலாகச் சேர்ந்த மாணவன் செல்வன் பாலாஜி ஸ்ரீதரன்



மன்ற ஆசிரியர்களுள் இம்முறை 97ம் ஆண்டுக்கான சிறந்த குருவாக தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார். அன்னை திருமதி லீலா வெற்வேற்கரசு



ஸ்காபரோவில் எக்லின்ரன் மிட்லான் சந்திப்பில் நடைபெறும் மன்ற சமய தமிழ் வகுப்பு மாணவர்கள் மன்ற தலைவர் அடியார் விபுலானந்தாவும், இந்த வகுப்பு ஆசிரியையும் மன்றத் தனாதிகாரியுமான அன்னை திருமதி லீலா வெற்றிவேற்கரசு ஆகியோருடன் மாணவர்கள்.



ஹரே கிருஷ்ண ஆலயத்தில் நடைபெற்ற மன்ற மாணவர்களின் வாணிவிழா. இன்பமே சூழ்க! எல்லோரும் வாழ்க!

# அடியேன் அழைத்துச் சென்ற யாத்திரையில் நடந்த சம்பவம்

96செப்டம்பரில் முதல்முதலாக ரொரன்ரோ மாநகரிலிருந்து 24 பக்தர்களை அகில இந்திய புனித யாத்திரைக்காக அடியார் என்று மெய்அன்பர்களால் அழைக்கப்படும் இச்சிறியோன் அழைத்துச்சென்றேன். எல்லோரும் கொடுத்து வைத்த சிறந்த பக்தர்கள், ஏனெனில் புனித யாத்திரை என்பது எல்லோருக்கும் கிட்டிவிடுவது அல்ல. சிறந்த பாக்கியசாலிகளே சிறந்த புனிததலங்களில் தங்கள் பாதங்களை பதிய வைக்கும் பாக்கியம் பெறுகிறார்கள்.

ஒரே யாத்திரையில் மிக முக்கியமான புனிதத்தலங்களைத் தரிசிப்பதென்பது மிகவும் கொடுத்து வைத்தவர்களுக்குத்தான் கை கூடுகிறது. இந்த வகையில் இந்த 24 மெய்அன்பர்களும் கொடுத்து வைத்தவர்களே. யாத்திரையின்போது இவர்களில் ஒருவரான திருமதி சின்னத்துரை சீத்தாலஷ்மி எனும் அம்மாவின் மடியிலே இறைவன் குழந்தையாக வந்து அமர்ந்த காட்சியை யாரும் நம்பமறுத்தாலும் உண்மையாக நடந்ததே.

நாங்கள் காசியிலே நீராடி விஸ்வநாதரையும் விசாலாட்சி அம்மனையும் தரிசித்து பூரணநிறைவோடு காசியை விட்டுக்கிளம்பி காயா ஷேத்திரம் நோக்கிப் புறப்பட்டோம். காயாவுக்குமுன் புத்தகாயாவைத் தரிசித்தோம். அங்குதான் புத்தர் தவம் இருந்து ஞானம் பெற்ற இடம். அங்கு பெரியகோவில் இருக்கிறது. புத்தபெருமான் அமர்ந்து தவம் செய்த அந்த அரசமரம் பெரிய விருட்சமாக இன்றும் இருக்கிறது. புத்தகாயாவின் தரிசனம் முடித்துக் கொண்டு புத்தகாயாவிலே உள்ள வசதியான ஹோட்டலான அசோக் இல் தங்கிவிட்டு காலை காயா சென்றோம்.

காயாவிலேதான் இறந்த முன்னோர்களின் ஆத்மா சாந்தி அடைவதற்காக பிண்டதானம் செய்வது. இக் கோவிலிலேதான் ஸ்ரீராமகிருஷ்ணரின் தகப்பனால் தனது தந்தைக்காக பிண்டதானம் செய்யச் சென்றபோது இறைவன் கனவிலே தோன்றி நான் உனக்குப் பிள்ளையாகப் பிறக்கப்போகிறேன் என்று கூறி மறைந்ததும் காயா ஷேத்திரம் தான். நாம் எல்லோரும் எமது இறந்த தாய், தந்தையர்க்கு பிண்டதானம் செய்து பிதுர்கடனைத் தீர்த்துவிட்டு கல்கத்தா செல்வதற்காக பீகார் மாநிலத்தின் தலைப்பட்டணமான பாட்னா எனப்படும் பாடலிபுரத்துக்கு விமானம் ஏறுவதற்காகச் சென்று கொண்டிருந்தோம். நாங்கள் பயணம் செய்த பஸ் வண்டி நல்ல வசதியானதும் (Luxury) இயந்திரம் எல்லாமே நல்ல நிலையில் தான் இருந்தது. வழியிலே டீசல் தடையினால் பஸ் நின்றுவிட்டது. மெக்கானிக் மூலமாக திருத்தி சிறிது தூரம் சென்றதும் மறுபடியும் நின்றுவிட்டது. இப்படி மூன்று தடவை நடந்தது. விமானத்தைப் பிடிக்கவேண்டிய நேரம் நெருங்கியது. தூரம் குறையவில்லை. பொழுது சாய்ந்து கொண்டிருந்தது.

எங்களில் பலர் பஸ்வண்டியை விட்டு கீழே இறங்கி நின்றோம். எல்லோருக்கும் ஏதோ ஒருவித யோசனை. நின்ற இடம் வயல்வெளிப்பிரதேசமாகவே இருந்தது. பஸ்வண்டியுள்ளே சிலர் இருந்தார்கள். விமானத்தை தவற விட்டால் அடுத்த செல்லவேண்டிய இடங்கள் எல்லாமே குழப்பமாகிவிடும் போன்ற சிந்தனை என்னுள்ளே நுழையத்தொடங்கியது. ஆனாலும் எல்லாம் அவன் செயலே எனும் நம்பிக்கை குழப்பமான சிந்தனைகளை யெல்லாம் என்னிடமிருந்து துரத்திக் கொண்டிருந்தது. இறுதியாக பஸ் ஓடாமல் நின்றுவிடவே சூரியன் மறைந்து வானம் இருட்டி வானத்திலே நட்சத்திரங்கள் தெரிந்தன. பாட்னா நகரம் தூரத்திலே மின்சார விளக்குகளால் தன்னை தூரத்திலே இருப்பதைக் காட்டியது. இந்தக் காட்சியோடு வானத்திலே எங்கள் 25 பேரையும் ஏற்றிச்செல்ல வேண்டிய விமானம் பாட்னாவ்வைவிட்டு கல்கத்தாவுக்குப் பறந்து செல்வதைப் பார்த்துக் கொண்டு மனம் கலங்கியவாறு நின்றோம்.

இறைவன் லீலைகளோ பலவிதம் இதுவும் அவன் லீலைதானா? இல்லை என்று எப்படிச் சொல்லமுடியும். மிக நல்ல பஸ்வண்டி சிறிய கோளாறை மட்டும் காட்டி ஓடமுடியாமல் நின்றதற்கு என்ன காரணம்? நாங்கள் எல்லோரும் பாட்னா போவதற்காக வாகனங்கள் வேறு கிடைக்கவில்லை. பஸ்சாரதியுடன் வந்த துணையாளர் பலதூரம் சென்று கூடாரமற்ற லொறி ஒன்றினை ஒழுங்குபடுத்தி கொண்டுவந்தார். நாங்கள் அந்த லொறியில் ஏறி பாட்னா பட்டணத்தில் உள்ள வசதி நிறைந்த ஹோட்டல் பாட்லி புதரா அசோக்கில் தங்கினோம். எல்லோரும் உள்ளம் நிறைந்த யோசனைதான். ஆனாலும் எல்லோர் உள்ளத்துக்குள்ளேயும் இனம்புரியாத நம்பிக்கை ஊற்றெடுத்தது.

சென்னையிலிருக்கும் எனது பிரயாண முகவரைத் தொடர்பு கொண்டு மறுநாள் 25 பேருக்கும் இடம் எடுக்க முயற்சி செய்தேன். மறுநாள் பகலில் அவர்களது முயற்சியில் நம்பிக்கை தென்படவில்லை. காரணம் அதே விமானத்துக்கு இரண்டு வாரங்களாக Waiting listல் பயணிகள் காத்துக்கிடக்கிறார்கள். நான் எல்லோருடைய பயணச்சீட்டையும் பகல் எடுத்துச்சென்று இந்தியன் எயர்லைன்சில் முகாமையாளரைச் சந்தித்து கேட்டபோது 25 பேருக்கும் அன்று மாலையே இடம் கிடைத்தது. அது மட்டுமல்ல கல்கத்தாவிலிருந்து புவனேஸ்வரத்துக்கும் அடுத்த நாள் இடம் கிடைத்தது. வரவேற்பதற்காக ஒவ்வொரு இடத்திலும் ஒழுங்குசெய்யப்பட்ட முகவர்களே ஆச்சரியப்பட்டார்கள். இது நோக்கரிய நோக்கானவனின் நுணுக்கமான லீலைகளா? இல்லையா?



### திருமதி சின்னத்துரை சீத்தாலட்சுமி

நாங்கள் கல்கத்தாவை அடைந்து ஹோட்டலுக்கு சென்றவேளை திருமதி சின்னத்துரை சீத்தாலட்சுமி அன்னையார் என்னிடம் வந்து கூறினார். பஸ் பழுதுபட்டு நின்ற சமயம் நீங்கள் எல்லோரும் கீழே இறங்கி நின்று கொண்டிருந்தீர்கள். எனக்கு பஸ்சை விட்டு இறங்க மனமில்லை. ஏக்கத்தோடு முருகனை நினைத்துக் கண்ணீர் விட்டு அழுதுகொண்டிருந்தேன். அந்தச் சமயத்தில் ஒரு குழந்தை தலையில் மயில் இறகுடன் பஸ்சுக்குள் ஏறிவந்து என்கால்களைப் பிடித்து துள்ளி என் மடியில் இருந்தது. நான் உண்மையிலேயே பயந்து எனது இரண்டு கண்களையும் மூடிக்கொண்டேன். சிறிது நேரத்தில் கண்களைத் திறந்து பார்த்தபோது குழந்தையைக் காணவில்லை. இதை நான் அப்போ ஒருவருக்கும் சொல்லவில்லை. இப்பத்தான் உங்களுக்கு சொல்கிறேன் என்று கூறினார். இவர் சொல்வதை எப்படி நம்பாமல் இருக்கமுடியும்?

எமது யாத்திரையில் இறைவனின் கருணை எங்களோடு இருந்ததை உணர்த்தவே எல்லாம் வல்ல பரம்பொருள் பஸ்ஸை பழுதுபடுத்தித் தன்னைக் குழந்தை வடிவாகக் காட்டினார். அற்புதங்கள் அந்தக் காலத்தில் மட்டுமல்ல, இந்தக்காலத்திலும் நடக்கும் இனிமேலும் நடக்கும். பக்தியும் அன்பும் உள்ளவர்களுக்கு எல்லாம் வல்ல மகேசுவரன் வெவ்வேறு விதங்களில் காட்சி கொடுப்பான்.

யாத்திரை செல்லும் போது நம்பிக்கையோடும் நல்லமனதோடும் இறைவனின் நினைப்போடும் செல்லவேண்டும். எப்போதும் இறைவனின் நினைப்போடும் பக்தியோடும் யாத்திரை செய்வதால் அவர்களின் வீடுகளில் நன்மைகள் நடக்கும். தேவைகள் எல்லாம் இறைவனால் நிறைவேற்றப்படும்.

மெய்யான பக்தர்கள் எல்லோருக்கும் அடியவனின் பக்தி கலந்த வணக்கங்கள் உரித்தாகட்டும்.

**இன்பமே சூழ்க எல்லோரும் வாழ்க!**



எத்தோபிக்கோவில் கிப்ளிங் ஸ்டீல்ஸ் சந்திப்பில் நடைபெறும் மன்ற சமய தமிழ் வகுப்பில் மாணவர்கள் தியானம் பயில்கிறார்கள். பிள்ளைகள் தியானம் பழகுவதால் நல்ல பக்தி ஏற்படுகிறது. மனதில் பக்குவம் ஏற்படுகிறது. நல்ல அறிவாற்றல் ஏற்படுகிறது. நல்லது எது கெட்டது எது என்று அறியும் வல்லமை ஏற்படுகிறது. நல்லவர்களாகவும், வல்லவர்களாகவும் வாழும் ஆற்றலை பெறுகிறார்கள். சிறுவயதில் தியானப் பயிற்சி பழகி நல்ல போதனைகளைப் பெறும் இச்சிறியவர்கள் வருங்காலத்தில் சீரும் சிறப்புமாக பேரோடும் புகழோடும் வாழ்வார்கள்.



வாணி விழாவில் நடைபெற்ற கோலாட்டத்தின் ஒரு காட்சியை நீங்கள் இங்கு காண்கிறீர்கள்.



அடியாரினால் நடாத்தப்படும் சமய பிராத்தனையில் பங்குபற்றியுள்ள பிள்ளைகளில் ஒரு பகுதியினர்

# முப்பெரும் இலிங்கங்கள்

## திரு. தம்பு இராமச்சந்திரன்

அருணாசலம், அருணகிரி, திருவருணை. சோணாசலம், சிவலோகம், முக்திபுரி எனப் பலவாறு அழைக்கப்படும் 'திருவண்ணாமலை' என்னும் தெய்வத் திருப்பதி வடஆர்க்காடு மாவட்டத்தில் உள்ள பெயர் பெற்ற நகரம். சென்னையில் இருந்து 186 கி.மீ தொலைவில் உள்ளது.

திருவாரூரில் பிறக்க முத்தி; தில்லையைத் தரிசிக்க முத்தி; காசியில் இறக்க முத்தி, திருவண்ணாமலையை நினைக்க முத்தி என அறிஞர்களால் புகழப்படும் பெருமையையுடைய இத்தலத்தைத் திருமுறைகளும், புராணங்களும் மிகச் சிறப்பித்துக் கூறியுள்ளன. மாணிக்கவாசக சுவாமிகள் 'திருவெம்பாவை' பாடியதும்; தன்னுயிரை மாய்க்கக் கோபுரமேறிக் கீழே விழுந்த அருணகிரிநாதரை; முருகப் பெருமான் அடிபடாது தாங்கி; அருளுபதேசம் செய்து. 'முத்தைத்தரு பத்தித் திருநகை' என முதலடி எடுத்துக் கொடுத்துத் தன்னைப் பாடும்படி பணித்ததும் இத்தலத்திலேயாம்.

இதன் வலத்தில் தென் பெண்ணையும், இடத்தில் செய்யாறும், இடையில் கமலை நதியும் வல, இட சுழிமுனை நாடிகள் போற செவ்கின்றன. ஈண்டுள்ள அழகிற சிறந்த பவளக் குன்றில் அமைந்திருந்த கௌதம முனிவர் ஆச்சிரமத்தில் உமாதேவியார் ஈசனின் இடப்பாகம் வேண்டித் தவமியற்றி 'அர்த்த நாரீஸ்வரர்' ஆனார் எனத் தலபுராணம் கூறும். இந்நகரை ஆண்ட பாண்டிய மன்னர்களும், திருப்புகழில் இடம்பெற்ற பிரபுடதேவராஜனும், கீர்த்திமிக்க ஸ்ரீ கிருஷ்ண தேவராமரும் பல்வேறு திருப்பணிகளை இத்தலத்திற்குச் செய்துள்ளனர்.

'அண்டத்தில் உள்ளது பிண்டத்தில் உண்டு' எனும் அநுபவ ஞானியர் வாக்கிற்கமைய இப்பூவுலகின் 'இதயஸ்த்தானம்' திருவண்ணாமலை என்பர். பிரம்மாவும், விஷ்ணுவும் அடிமுடி தேடிய பேரொளிப் பிழம்பே திருவண் ணாமலை எனவும், முந்திய யுகங்களில் அக்கினி, தங்க, வைர மலைகளாகவும், கலியுகத்தில் கல் மலையாகவும் திகழ்வதாக ஐதீகம். அதனால் இதனைச்சுற்றி வலம் வருவதும், (கிரிப்பிரதஷினம்) கார்த்திகைத் திங்கள் தீபவிழாவும், மலையில் ஏற்றப்படும் 'மலைத்தீபமும்' பக்தர்களால் மிகச் சிறப்பாக கொண்டாடப்படுபவை.

இம்மலையில் அமைந்துள்ள குகைகளில் பலப்பல சித்த புருஷர்கள் கடுந்தவம் இயற்றி முத்தியடைந்துள்ளனர். இன்னம் அத்தகையோர் புதர்களால் மூடுண்டு பிறர் அறியாவண்ணம் தவம் இயற்றுவதாக அறிந்தோர் கூறுவர். குகை நமச்சிவாயர் குரு நமச்சிவாயர், விரூபாஷதேவர், ஈசான ஞான தேசிகர் போன்ற தெய்வீக புருஷர்களும் இன்று நடமாடும் தெய்வமாகத் திகழும் மகான் ஸ்ரீ ராம்சுரத்குமார் போன்றோரும் அங்கிங்ககலாது இத் தெய்வத் திருப்பதியில் உறைந்து புனிதம் அடைந்துள்ளனர். 'சோணா தீர்த்தம்' 'பாலித்தீர்த்தம்' என்னும் தென்னமுதத் தீர்த்தங்களோடு கோயில் கொண்டுள்ள சிவனாருக்கு 'அருணாசலேஸ்வரர்' என்றும் அம்பிக்கைக்கு 'உண்ணா முலை அம்மை' என்றும் மூலத்தானத்தில் அருளுருவாய் நின்று பக்தர்களுக்கு அருள்பாலிப்பதை 'தேஜோலிங்கம்' என்னும் ஸ்தல புராணம் கூறும்.

அருணாசலசிவ! அருணாசலசிவ!
அருணாசலசிவ! அருணாசலசிவ!

இந்த நூற்றாண்டின் ஆரம்பத்திலிருந்து அரை நூற்றாண்டுகளுக்கு மேலாக ஆத்மீக ஈடுபாடுடையாரை ஈர்த்து அருளொளி பரப்பிய அருட்பெரும் ஜோதி ஸ்ரீ ரமண மகரிஷிகள். இவர் திருவண்ணாமலைக்கு வந்து சரியாக நூறு ஆண்டுகள் நிறைவெய்தி உள்ளன. (1896-1996) மகரிஷி சுப்பிரமணியர் அவதாரமென்பது இவரது அடி யார்கள் நம்பிக்கை. கல்லால் நிழற்கீழ் தட்சணாமூர்த்தியிடம் மௌன உபதேசம் பெற்ற சனகாதி முனிவர்களுள் சனற்குமாரரே முருகப்பெருமானாக அவதரித்தார் எனவும், பின்னர் ஞானசம்பந்தராகவும், குமாரிலபட்டராகவும் அவதரித்து; அவைதிக மதங்களாகிய சமண, பௌத்த மதங்களை வாதப் பிரதிவாதங்களால் வென்று வைதிக தர்மத்தை நிலைநிறுத்தினர் எனவும் காஞ்சி மாமுனிவர் கூறுவார்.

சதா சொருபத்தில் திளைத்து, ஸடஜநிஷ்டராய், தனக்கன்னியமாக எதையும் பாராது மௌன அருள் பொழிந்த இக்கருணை முகிலை சனற்குமாரர் என்பது சால்வும் பொருத்தமே. ஒரு ஞானியை அவரது செயல் நடத்தை மூலம் கண்டு கொள்ளமுடியாது. இதை விளக்கப்பகவானே ஒரு கதை கூறினார்: உயிரற்றுப் பிறந்த 'பரீட்சித்தை' பார்த்துப் பெண்கள் அழுது புலம்பினர். குழந்தையை உயிர்ப்பிக்குமாறு கண்ணபிரானை வேண்டினர்.

ஸ்ரீ கிருஷ்ணர் கூறினார்: 'ஒரு நித்திய பிரமச்சாரி உயிரற்றுக் கிடக்கும் குழந்தையைத் தொட்டால் குழந்தை உயிர் பெற்று விடும்' அப்படிப்பட்ட நித்திய பிரமச்சாரிகள் எங்கிருக்கிறார்கள்? ஒருவரும் குழந்தையைத் தொட்டுத் தம் பிரமச்சரியத்தைச் சோதிக்க விரும்பவில்லை. சாஷாத் சுகதேவரும் குழந்தையைத் தொடத்துணியவில்லை. என்ன செய்வது?

அப்போது புன்முறுவல் பூத்தவாறு ஸ்ரீ கிருஷ்ணர் 'நான் ஒரு நித்திய பிரமச்சாரி; குழந்தை உயிர் பெற்றெழட்டும்' என்று கூறிக் குழந்தையைத் தொட்டார். குழந்தை உயிர்பெற்று வளர்ந்து பிற்காலத்தில் பரீட்சித்து

22ம் பக்கம் பார்க்க

# வேதாந்த ஞான மன்றம் (கனடா)

நடாத்தவிருக்கும்

# சித்திரைத் தமிழ் புத்தாண்டு விழா

1998இல் நடைபெறவிருக்கும் தமிழ்ப்புத்தாண்டு விழாவில்

- சமய அறிவுப்போட்டி
- பேச்சுப் போட்டி
- கட்டுரைப்போட்டி
- நாடகப்போட்டி
- பண்ணிசைப்போட்டி

நடைபெறவுள்ளன

மேற்கூறிய ஐந்து போட்டிகளிலும் வேறு சமயத்தைச்சேர்ந்த மாணவர்களும் பங்குகொள்ளலாம், ஆனால் போட்டிகள் எல்லாம் இந்து சமயத்தை அடிப்படையாகக் கொண்டதே!
வேதாந்த ஞானமன்ற சமய தமிழ்ப் பள்ளியில் படிக்கும் மாணவர்களுக்கு பிரவேசம் இலவசம்!

**போட்டியில் பங்கு கொள்ளும் மாணவர்கள் அனைவரும் காயத்திரி மந்திரத்தை மனப்பாடம் சொல்ல வேண்டும்**

"ஓம் பூர் புவஸ்ஸுவ:
தத் ஸவிதுர் வரேண்யம்
பர்கோ தேவஸ்ய தீமஹி
தியோ யோ ந: ப்ரசோதயாத்"

**காயத்திரி மந்திரத்தின் கருத்து:**
"யார் நம் அறிவைத் தூண்டுகிறாரோ அந்த சுடர்க்கடவுளின் மேலான ஒளியைத் தியானிப்போமாக!"

| | | |
|---|---|---|
| பாலர் பிரிவு | 14.4.98இல் | 7 வயதிற்குட்பட்டோர் |
| கீழ்ப்பிரிவு | 14.4.98இல் | 7 - 10 வயதிற்குட்பட்டோர் |
| மத்தியபிரிவு | 14.4.98இல் | 10 - 14 வயதிற்குட்பட்டோர் |
| மேற்பிரிவு | 14.4.98இல் | 14 - 18 வயதிற்குட்பட்டோர் |

பேட்டிக்கான தினம், இடம் பின்பு அறிவிக்கப்படும். மேலும் விபரங்கள் பத்திரிகைகளில் வெளியிடப்படும். தற்போது உங்கள் பெயர்களைத் தொலைபேசியில் பதிவு செய்து கொள்ளலாம்.

**போட்டிகளில் பங்குபற்றும் எல்லோருக்கும் பரிசில்கள் வழங்கப்படும்**

வேதாந்த ஞான மன்றம்

| | |
|---|---|
| உப அதிபர், நிகழ்ச்சிகள் இயக்குனர் | (416) 267-1220 |
| நிகழ்ச்சிகள் அமைப்பாளர் | (416) 289-6496 |
| பொதுச் செயலாளர் | (416) 492-2235 |
| தலைவர் | (416) 769-7747 |

# இந்திய திருத்தலங்களும் தீர்த்த யாத்திரையும்



## 1998 தை மாதம் 1ம் திகதி ரொரொன்ரோவிலிருந்து புறப்படும் 30 நாட்கள் புனித யாத்திரை!

'புனித கங்கையில் நீராடினால், ஆணாயினும் சரி பெண்ணாயினும் சரி, பிறந்த நாளில் இருந்து செய்த பாவங்கள் நீங்கிவிடும்' -மகாபாரதம்

'கங்கையே யமனிடம் இருந்து எம்மை மீட்கும் சக்தி உன் ஒரு துளி நீருக்குத்தான் இருக்கின்றது.' -மகாகவி காளிதாசர்

'கங்கையே! உன் அலைகளைப் பாத்துக் கொண்டிருந்தாலும், உன் நீரில் அமிழ்ந்து நீராடினாலும் இந்திரப்பதவி தேடிவந்து கிட்டும் - ஓர் ஆசாரிய புருஷ்

**வடக்கிலே சிறப்புமிக்க கங்கை நீராடல், காசி ஷேத்திரம், ரிஷிகேசம், ஹரித்துவாரம், மதுரா. பிருந்தாவனம், திரிவேணி சங்கமம், காயா, புத்தகாயா, சாரநாத், தட்சினேஸ்வரம், பூரி ஜெகன்நாதம், கோனராக் சூரியன் ஆலயம், (உலக அதிசயங்களில் ஒன்றான தாஜ்மகாலும் பார்வையிடப்படும்)**

தெற்கே ஆந்திராவில் திருப்பதி, புட்டபர்த்தி, தமிழ்நாட்டில் முக்தி தரும் சிவாலயங்கள், ஆறுபடை வீடுகள், அம்மன் தலங்கள், வினாயகர் தலங்கள், திருநள்ளாறு, காஞ்சிபுரம், திருவண்ணாமலை, ஆச்சிரமங்கள், கன்னியாகுமரி, சுசீந்திரம் மற்றும் பல ஆலயங்கள். கேரளாவில் பத்மனாபர் ஆலயம், சபரிமலை ஐயப்பன் ஆலயம் (இருமுடி கட்டி பெரும்பாதை வழியாகவோ அல்லது சிறுபாதை வழியாகவோ செல்லும் மாலையிட்ட ஐயப்ப பக்தர்கள் இந்த சிறப்பு யாத்திரையில் கலந்து கொள்வதால் மேலும் சிறப்பான பலன் கைகூடும். சாமியே சரணம் ஐயப்பா!)

40க்கு மேற்பட்ட புனிதத்தலங்களைத் தரிசிக்கும் இச்சிறப்பு யாத்திரை வீடியோப் படமாக்கப்பட்டு, வருவோருக்கு அன்பளிப்பாக ஒரு பிரதி வழங்கப்படும்.

தொடர்புகளிற்கு உங்கள் சேவைக்குரிய அடியார்

**(416) 769-7747** **(416) 805-7187**

மகாராஜாவாகப் புகழ்பெற்றார்.

பதினாறாயிரம் கோபிகள் சூழ லீலைகள் புரிந்த ஸ்ரீ கிருஷ்ணர் ஒரு பிரமச்சாரியா? என்று அதிசயப்பட வேண்டாம் ஜீவன் முத்தர்களை நாம் புரிந்து கொள்ள முடியாது. ஜீவன் முத்தன் தனக்கன்னியமாக யாரையும், எதையம் காண்பதில்லை. ஞானியை ஞானிதான் அறிய முடியும்.

தனதருளை நாடி வந்த அன்பார்கள் அனைவருக்கும் யாவற்றினும் அதி உத்தமமானதாகிய ஆத்ம விசாரத்தையே பகவான் போதித்தார். எவ்வினா வினாவினும் இதயத்தை நோக்கித் திருப்புவதாகிய 'நீ யார்? உன்னை யறி' என்றே பெரும்பாலும் போதித்து வந்தார்.

உறக்கத்தில் கொடிய சொப்பனம் கண்டு உளறி, அலறித்துடிக்கும் ஒருவனுக்கு நாம் எவ்வாறு உதவமுடியும்? அவனோடு சேர்ந்து சொப்பன நிலைக்குப்போய் ஆறுதல் கூறுவதா? அன்றி அவனை உறக்கத்திலிருந்து தட்டி எழுப்பி விழிப்படையச் செய்வதா? விழித்தாலன்றி சொப்பனத்துயர் தொலையாது. ஞானவிழிப்புக்கு விசாரத் தினும் உத்தம மார்க்கம் வேறில்லை. அவரையண்டிய பண்டித விற்பன்னர்களும், தத்து வமேதைகளும் வினாவிய வினாக்களுக்கெல்லாம் அவர் தம் பிரம்மாஸ்திரத்தையே பிரயோகித்து விழிப்பைத் தூண்டுவதிலேயே கருத்தா யிருந்தார். (நீ யார், உன்னை அறிந்தாயா? போன்ற வினாக்களையே அன்பர்கள் பிரம்மாஸ்திரம் என்று கூறுவர்)

பகவான் விரூபாக்ஷ குகையில் வசித்த காலத்தில் 'அமிர்த நாத யதீந்திரர்' என்னும் மலையாள அன்பர் 'யாரோ இந்த அருணாசல ரமணன்? சிவனா? விஷ்ணுவா? முருகனா? என்று பொருள் தரும் மலையாள விருத்தத்தை எழுதிப் பகவானது இருக்கையில் வைத்தகன்றார். பகவான் தனதாசனத்தில் அமருங்கால் அதைத் கண்ணுற்றுக் கீழ்க் கண்ட மலையாள விருத்தத்தைப் பதிலாக எழுதினார்:

'அரியாதி இதர ஜீவர(து) அஹ வாசிஜ குகையில்
அறிவாய் ரமி பரமாத்துமன் அருணாசல ரமணன்'

சகல ஜீவர்களின் இதயத்தில் தூய அறிவு மயமாய் எந்த பரமாத்மா விளங்கிக் கொண்டிருக்கிறதோ அவனே அருணாசல ரமணன். அகண்ட சிதாகாச சொரூபனை பரமாத்மாவேதான் என்பதை பகவான் வாக்கால் அறிந்த பின்பும் மயக்கமுண்டோ?

சத்குரு ஸ்ரீரமண பகவான் (14-04-1950) விக்ருதி வருடம் சித்திரை மாதம் 2ம் திகதி இரவு 8:47க்கு மகாசமாதி அடைந்தார். வானவெளியிலே ஓர் ஒளிமிக்க ஜோதி வானைக் கீறிக்கொண்டு சென்று அருணாசலத்தைச் சார்ந்து மறைந்தது. தமிழ்நாட்டின் பல பாகத்தில் இருந்தோரும் இவ்வரும் ஜோதியைக் கண்டனர்.

மிக்க ரமணீயமான சூழலில், ரமணாச்சிரமம் அமைந்திருக்கிறது. அங்கு உள்ள பகவானின் சமாதி மேல் விளங்கும் ரமண லிங்க மூர்த்தியை வழுத்துவோம்.

அருணாசலசிவ அருணாசலசிவ! அருணாசலசிவ! அருணாசலசிவ!

ஸ்ரீ ரமண மகரிஷிகளுக்கு ஒன்பது வயது மூத்தவரும் மகரிஷிகளுக்கு முன்பே அண்ணாமலை வாசியுமான மகான் ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகளை சிறிது சிந்தனை செய்வோம். இவரோர் அவதூதர். அம்பிகையை உபாசித்துச் சித்தி அடைந்தவர். உடற்பிரஞ்ஞை சிறிதும் அற்றவர். நமது யாழ்ப்பாணத்துக் கடையிற் சுவாமிகள் போன்றவர். குளியார்: ஆடைமாற்றார் ஆயினும் அருகில் நெருங்கினால் நறுமணம் வீசும். தொட்டதெல்லாம் துலங்கும்; கால்பட்டால் கஸ்டம் தீரும். கண்ணோக்கம் கிடைத்தால் தீராத வியாதி தீரும். பல்வேறு சித்திகள் புரிந்தவர்.

காஞ்சிபுரத்தில் அதி உத்தம அந்தணகுலத்தில் 1870ல் பிறந்தவர். இவருக்கு நான்கு வயதிருக்கும்போது ஒருநாள் தாயோடு கோயிலுக்குப் போனார். போம்வழியில் ஓர் பொம்மை கடை. குழந்தை ஓடிச்சென்று ஒரு கண்ணன் பொம்மையை எடுத்துக் கொஞ்சிக் கொண்டு நின்றான். தாயிடமோ காசில்லை. குழந்தையோ பொம்மையைத் திருப்பி வைக்கமாட்டேன் என அழுது அடம்பிடித்தான். இருவரையும் ராஜி பண்ணினான் கடைக்காரன். 'அம்மா நான் இப்போது தான் கடையைத் திறந்தேன். ஒன்று கூடப் போணியாகவில்லை. ஆனாலும் குழந்தையின் முகத்தைப் பார்த்தால் பணம் கேட்கத்தோன்றவில்லை. எனது அன்பளிப்பாகக் கொண்டு போங்கள்' என்று கூறிப் பொம்மையைக் குழந்தையே வைத்திருக்குமாறு கொடுத்தனுப்பினான்.

அடுத்த நாளும் அதே வழியால் இருவரும் சென்றனர். இவர்களைக் கண்ட கடைக்காரன் ஓடிவந்து கைகூப்பி வணங்கினான். 'அம்மா இந்தக் குழந்தை சாதாரண குழந்தை இல்லை. திருவிழாக் காலங்களில் கூட நூறு பொம்மை விற்காது. நேற்று மட்டும் ஆயிரம் பொம்மைகள் விற்றன. இவனது கை தங்கக் கை தாயே என்று கண்ணீர் துளும்ப நின்றான். சுவாமிகள் இடது கையில் சூலமும் வலதுகையின் நடுப்பகுதியில் செந்தாமரை போன்று செந்நிறப்புள்ளி அமைந்திருந்ததென அவருடன் நெருங்கிய அன்பர்கள் கூறுவர்.

சுவாமிகள் பதினேழு வயதிற்குள் தமிழ், வடமொழி இலக்கண, இலக்கியங்களையும், வேதத்தையும் முறைப்படி கற்றுத் தேர்ந்தார். கிண்கிணி நாதம் போன்ற சாரீர வளத்தோடு சங்கீதப் புலமையும் உண்டு. மூகரின் 'மூக பஞ்சதசியில்' ஆதியந்தப் பிரேமை. இது சங்கரரின் 'சௌந்தர்யலகரிக்கு' இணையானது. இத்தனை புலமை இருந்தும் ஏதும் அறியாது பேதை போன்று திகழ்ந்தார்.

பதினேழாவது வயதில் தாயின் மறைவிலிருந்து, இவரது தவ வாழ்க்கை தொடங்கியது. மயானத்திலிருந்து இரவு பகலாகத் தியானம் செய்வார். உறவினர் திருமணம் செய்விக்க முயலவே திருவண்ணமாலை வந்து விட்டார். அன்றிலிருந்து சமாதியாகும் வரை திருவண்ணாமலை விட்டகன்றார் இல்லை.

ஒரு தரம் இவரது அன்பர்கள் இவரை

வலுக்கட்டாயமாக ரெயில் ஏற்றித் தங்கள் இல்லறத்திற்கு கூட்டிப் போக முயன்றனர். ரெயில் திருவண்ணாமலை எல்லையை எட்டியதும் நின்று விட்டது. எவ்வளவு முயன்றும் புறப்படவில்லை. அன்பர்கள் தங்கள் தவற்றை உணர்ந்து மன்னிப்புக் கேட்டு சுவாமிகளை இறக்கிவிட்ட பின்னாலேயே வண்டி கிளம்பியது.

இவர் அன்பர்களுக்குப் பண்ணிய அநுக்கிரகம் ஏராளம். சுப்பிரமணிய முதலியார் எனும் அன்பரை ஆத்மீக வழியில் ஊக்குவிக்க எண்ணினார். மாம்பழக்குகையில் மகரிஷிக்கு உணவுச்சேவை செய்து கொண்டிருந்த முதலியாரை நோக்கி: என் தம்பி (மகரிஷி)க்கு பத்தாயிரம் ரூபாய் சம்பளம்; எனக்கு ஆயிரம் ரூபாய் சம்பளம்; நீயேன் நூறு ரூபாயாவது பெறக்கூடாது என்றார். சம்பளம் என்றால் ஆத்ம செல்வம். இதிலிருந்து மகரிஷிகள் மேல் அவர் வைத்த மதிப்புத் தெரிகிறது.

அன்னை பராசக்தியைக் குறித்து அருந்தவம் இயற்றிச் சித்தியடைந்தவர் சுவாமிகள். அது மட்டுமல்லாது அம்பிகையாகவே மாறியவர். பாதாள லிங்கக் குகையில் மகரிஷிகள் தவமியற்றும் போது போக்கிரிச் சிறுவர்களிடம் இருந்து அவரைக் காக்கப் பேரொலியோடு நகைப்பார். சிறுவர்கள் அச்சமடைந்து அவ்விடம் விட்டகன்று விடுவார்கள். அங்கு வந்த ஒரு பெரியவரிடம் 'என் குழந்தை உள்ளே தவம் செய்கிறான் பார்' என்றார். உங்களுக்கேது குழந்தை? என்றாலும் 'முன்பே சொல்லவில்லையா நான் பார்வதிதேவி' என்று 'இதோ கந்தனைப்பார் என்று ரமணரைக் காட்டினார்' இதன் மூலம் ரமண பக்தர்களின் மனத்தையும் குளிரப் பண்ணினார்.

ஒருதரம் ரமணாச்சிரமத்தில் மகரிஷிகள் உட்கார்வதற்காக புதிய ஷோபா ஒன்றை பக்தர்கள் அளித்தார்கள். அமரும்படி கேட்டுக் கொண்டார்கள். 'உட்கார வேண்டும் என்று தெரியவில்லையா என்ன? நான் என்ன சேஷாத்ரி சுவாமிகள் போல் தேகத்தை மறந்திருக்கிறேனா?' என பொழிந்தருளினார். இதன் மூலம் சேஷாத்ரி சுவாமிகள் மேல் மகரிஷிகளுக்கு உள்ள மதிப்புத் தெரிகிறது.

1929 ஜனவரி 4ந் திகதி இவர் மகா சமாதியடைந்தார். ஸ்ரீ ரமணாச்சிரமத்திற்கு அண்மையிலேயே சுவாமிகள் சமாதியும் உள்ளது. சேஷாத்ரி சுவாமிகள் ஓர் அன்பரிடம் கூறினார். அண்ணா மலையில் மூன்று லிங்கங்கள் உண்டு. ஒன்று 'தேஜோலிங்கம்' மற்றொன்று 'ரமண மகரிஷி' மற்றொன்று 'சேஷாத்ரி'

மகான்கள் வாக்கில் பொய் கிடையாது. மகான் சேஷாத்ரி சுவாமிகள் அதிட்டானத்தில் ஒளிர்வது 'அருள்லிங்கம்'

அருணாசலசிவ! அருணாசலசிவ!
அருணாசலசிவ! அருணாசலசிவ!



## 34ம் பக்கத் தொடர்ச்சி

பொறுத்தவரை அவற்றை வாசிக்கக் கூடிய வல்லமை உடையவர்கள் மிகவும் அரிது. கூடுதலான குழந்தைகள் தொலைக்காட்சி பார்ப்பதிலேயே தமது கவனத்தை செலுத்துகின்றனர். அதில் வாரம் ஒருமுறை அரை மணித்தியாலமே தமிழ் நிகழ்ச்சிகள் ஒலிபரப்பப் படுகின்றது. அந்த வகையிலே எமது இளந் தலைமுறையினர் எமது பண்பாட்டின் அடிப்படையில் சமூக மயமாக வேண்டுமெனின் அவர்களை தொடர்ச்சியாக ஒரு நிறுவனத்தினூடாக வழிகாட்டவேண்டும். அந்த அரும்பெரும் நோக்கத்தை மையமாகக் கொண்டு சுவாமி பிரகாஷ் மயானந்தரின் தெய்வீக அருளினால் அடியார் விபுலானந்தா அவர்களின் வழிகாட்டலில் கனடா வேதாந்த ஞான மன்றம் ரொரன்ரோ, மிசிசாகா, ஸ்காபரோ போன்ற இடங்களில் வகுப்புக்களை நடாத்தி வருகிறது.

'ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனை
சான்றோன் எனக் கேட்ட தாய்'

என்று வள்ளுவர் அழகாகக் கூறியுள்ளார். ஓர் தாய் குழந்தை கிடைத்த பொழுதை விட மற்றவர்களால் தன் மகன் அவன் நற்பண்புடையவன் என்று போற்றப்படும் போது மிகுதியாக மகிழ்வாள்.

பெற்றோர்களே உங்கள் குழந்தைகளை வழிகாட்ட வேண்டிய பாரிய பொறுப்பு உங்களிடம் உள்ளது!

ஏனெனில் தனக்கென தனித்துவமான தமிழ் பாரம்பரியத்தைக் கொண்ட தமிழினம் வழிதவறி உயர்ந்த பண்பாட்டைக் காணமுடியாதிருக்கும் அன்னிய பாரம்பரியத்துக்கு அடிமையான நிலையை இன்று நாம் காண்கின்றோம். எமது பண்பாட்டை வழிதவற விட்டவர்கள் என்ற பழிச் சொல்லுக்கு நாம் ஆளாக வேண்டுமா? உங்கள் குழந்தைகளின் பிஞ்சு மனங்களை பண்படுத்தி சமய உணர்வையும், நல்லறிவையம், நற்பழக்கங்களையும் எமது பண்பாட்டின் சிறப்பையும் கற்றுக் கொடுக்க இங்கு தமிழர் வாழுமிடமெங்கும் வேதாந்த ஞான மன்றத்தினர் வகுப்புக்களை ஆரம்பித்து வருகிறார்கள். மன்றத்தின் தொ. இலக்கம் (416) 769-7747 - (416) 492 2235. உங்கள் பிள்ளைகளை இந்த அரிய போதனைகளைப் பெறுவதற்காக இந்த சிறப்பான வகுப்புக்களுக்கு அனுப்புங்கள். உங்கள் குழந்தைகளின் எதிர்காலம் சிறப்படையட்டும். எதிர்காலத்தில் எமது சமூகத்தில் தர்மம் செழித்து ஓங்கட்டும். இன்றைய குழந்தைகள் பண்பட்ட மனமுள்ளவர்களாக வளர்ந்து எதிர்காலத்தில் தர்மசீலர்களாக எமது சமூகத்தை சிறப்பாக வழிநடத்தும் வழிகாட்டிகளாக வாழவேண்டும். சகல செல்வங்களையும் பெற்று சிறப்போடு வாழவேண்டும்.

பிள்ளைகளுக்கு உண்மையான வழியைக் காட்டி அவர்கள் வாழ்வு சீரோடும் செல்வச் சிறப்போடும் வாழுவதற்காக முன்நிற்கும் நல்அறிவுள்ள பெற்றோர்கள் எத்தனை பேர்? இந்த நல்லவிடயத்தை அறிய முடியாமல் தூக்க மயக்கதில் வாழுகின்ற பெற்றோர்கள் எத்தனை பேர்?

தாய் தந்தையரின் ஒத்துழைப்பிலே தான் பிள்ளைகளின் எதிர்காலம் தங்கியுள்ளது!

*The leaders in 22K Gold Jewellery*

# Selvasegara Jewellers

திறமான வைரத்தை நிர்ணயிக்கும் முக்கிய அம்சங்கள்

நிறை (Carat weight)
நிறம் (Colour)
தெளிவு (Clarity)
வெட்டு (Cut)



வைரத் தோடுகளுடன் மதிப்பீட்டுப் பத்திரங்கள் கொடுக்கப்படும்

சிங்கப்பூரில் தயாரிக்கப்பட்ட 22கரட் தங்க நகைகள் கிடைக்கும் ஒரே நகைக்கடை

# செல்வசேகரா நகை மாளிகை

**Tel: (416) 285-7269**

email: selvasegara@tamilpages.com

**2347 Eglinton Ave. East, Scarborough, ON**

(1 Block west of Kennedy)

# பெண்களின் மகிமையை ஆண்கள் அறிவாரோ?

குடும்பம் என்பது மனித வாழ்க்கையில் முக்கிய அமைப்பாக இருக்கிறது. குடும்பத்தில் சட்டமும் அதிகாரமும் நுழைவது நல்லதல்ல. சட்டமும் அதிகாரமும் குடும்பத்தில் நுழைந்துவிட்டால் குடும்பத்தின் புனிதத் தன்மை, அமைதி, ஆனந்தம் எல்லாம் பறந்தோடிவிடும். குடும்பத்தை வழி நடத்துவது ஆணா? அல்லது பெண்ணா? என்று ஆராயும் போது முக்கியமாக பெண் என்றே பதில் வருகிறது. மனைவி என்ற சொல்லிலேயே கருத்தும் புதைந்து கிடக்கிறது. மனையை நடாத்தும் தகுதியை பெண் பெறுவதால் மனைவி என்று அழைக்கப்படுகிறாள்.

ஒரு பெண் திருமணத்தின் பின் அன்னையாகிறாள். பத்து மாதம் உலக ஜீவராசிகளின் மேன்மையான பிறப்பைப் பெறும் மனித சரீரத்தை உருவாக்கி உயிரளித்து சுமந்து பாதுகாத்து பெற்றெடுத்து, வளர்த்து, ஆளாக்கும் பொறுப்பு அன்னையின் உடையதே! அன்னையாகும் தகுதி ஆணுக்கு உண்டா? உலகிலே அன்னையின் சிறப்புக்கு ஈடாக ஏதேனும் உண்டா? உலகத்தில் எந்த ஒரு நாட்டின் தலைவர்களாகட்டும், மகாமேதைகளாகட்டும் அவதார புருசர்களாகட்டும் இவர்கள் அன்னை இல்லாமலா உருவாக்கப்பட்டார்கள்? குடும்பத்திலே அன்னைதான் முக்கியமானவள். இறைவன் நமக்கு அருள் கொடுப்ப தெல்லாம் அன்னை மூலமாகத்தான் என்பதை ஞானிகளும் முனிவர்களும் நன்கறிந்து உலகிற்கெல்லாம் பறை சாற்றினார்கள்.

அண்மையில் தமிழ்நாட்டில் 64வது நாயன்மாராக ஏற்றுக்கொள்ளப்பட்ட தெய்வத்திரு திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் ஒரு தடவை தமது பிரசங்கத்திலே 'ஒருவர் தாயின் பாதங்களைத் தொட்டு ஒரு முறை வணங்கினாலே நான்கு முறை உலகை வலம் வந்த பலனும், 10,000 முறை கங்கையில் நீராடிய பலனும் கிடைக்கிறது' என்று கூறினார். நாங்கள் தாயின் மகிமையையும், தாய்மையின் மகிமையையும் அறியாமல் வாழுகிறோம்.

**தாய் தந்தை எனும் புனித உறவு, கணவன் மனைவி எனும் புனித உறவு, சகோ தரர்கள் எனும் புனித உறவு எல்லாமே இன்று போலி உறவுகளாக நடப்பதற்கு என்ன காரணம்?**

உண்மை, ஒழுக்கம், பண்பு என்பபடும் உயர்ந்த தர்மம் இன்று என்ன நிலையில் உள்ளது? உண்மை பொய்யாக மாறியுள்ளது. ஒழுக்கம் கபடநாடகமாகவும்; பண்பு வேடமாகவும் மாறியுள்ளது. இதற்கு என்ன காரணம்? நல்லநெறிகளை அறியமுடியாத நிலையில் அதாவது அறிய முடியாமையாகிய அறியாமை நிலையில் நாம் இருக்கிறோம்.

இந்த நல்ல நெறிகளை அறியவைக்கும் ஆச்சாரி யர்களான குருமார்கள் நம்மிடையே இன்று அரிதாக உள்ளதே காரணம். பண்டைக் காலத்திலே துறவிகள் பிச்சை எடுத்து வாழ்ந்தார்கள். இல்லற வாசிகள் துறவிகளுக்கு அன்னமிட்டு உபசரிப்பதால் துறவிகள் கூறும் ஞானவார்த்தைகளைக் கேட்டு உணர்ந்து உண்மை அறிவோடும் ஒழுக்கத்தோடும் பண்போடும் வாழ்ந்தார்கள். அந்தக் காலத்திலே சமயம் வாழ்வோடு பின்னப்பட்டு இருந்ததால் மக்கள் மனங்கள் பண்பட்டு, பண்பாட்டோடு வாழ்ந்தார்கள். அரசர்களும் சிறந்த ஞானிகளின் ஆலோச னைகளைப் பெற்றே ஆட்சி நடத்தினார்கள். அந்தக் காலங்களில் பணம் உள்ளவர்களானாலும் வறியவர் களானாலும் அநேக மக்கள் அமைதியோடும் ஆனந்தத் தோடும் குடும்பம் நடாத்தினார்கள். பண்பாட்டுக் காலங்க ளிலே பெண்கள் கூர்மையான அறிவுள்ளவர்களாகவும் ஞானிகளாகவும் வாழ்ந்தார்கள். பெண்கள் நல்ல அறிவுரைகளைப் பெற்று உண்மையோடும் ஒழுக்கத்தோடும் பண்போடும் உயர்ந்து அடக்கமாக வாழ்க்கை நடாத்தினார்கள். **நல்லறிவுடைய பெண்களே அடக்கமாக நடக்கும் தகுதியைப் பெறுகிறார்கள்.** ஆண்கள் நாட்டுக்கும், சமூகத்திற்கும், வீட்டிற்கும் பாதுகாப்பு தந்தார்கள். சமூகத்திற்கும் வீட்டிற்கும் பாதுகாப்பு வழங்கும் ஆண்மை நிறைந்த ஆண்களை பெண்கள் தங்கள் கண்களென உணர்ந்து சேவை செய்தார்கள். நல்ல பிள்ளைகளை உருவாக்கி கணவர்களுக்கு பணிவிடை செய்து இல்லறத்தை நல்ல வழியில் நடாத்திய சிறந்த அறிவுள்ள பெண்கள் கொண்ட இனம் என்பதை எண்ணி நாம் பெருமை கொள்வ தில் என்ன பயன்? இன்று நமது நிலை எப்படி உள்ளது?

இன்று இந்தியாவிலும், இலங்கையிலும் உள்ள கல்வித் திட்டம் வெள்ளையரின் ஆட்சிக் காலத்தில் ஏற்பட்டதே. இன்றைய இந்தக் கல்வித் திட்டம் புற உலக வாழ்வுக்கும் பணம் சம்பாதிக்கும் வழிக்குமே உதவுகிறது. இன்று மேற்குலக நாடுகளின் கல்வியான விஞ்ஞானமோ, நிர்வாகத்திறமையோ, அதிகாரமோ, சட்டமோ புனிதமான குடும்பவாழ்வுக்கு வழிகாட்ட முடியாமல் திண்டாடுகிறது. குடும்பத்தில் சச்சரவுகளுக்கே வழிகாட்டுகிறது. மேலை நாட்டார் இன்னமும் நாகரீகத்தின் தொடக்கத்திலே தான் நிற்கிறார்கள். அவர்கள் குடும்ப உறவுக்குள் சட்டங்களைத் திணித்து, குடும்பம் எனும் புனித உறவைச் சீரழிக்கிறார்களே தவிர குடும்ப உறவின் புனிதத் தன்மையையும், மகத்து வத்தையும் புரிந்து கொள்ளமுடியாமல் இருக்கிறார்கள். பெரும்பாலானவர்கள் வீட்டில் சதா வாக்குவாதமும் ஆனந்தமற்ற நிலையிலும் வாழ்க்கை நடாத்துகிறார்கள். வெளியுலகில் தாங்கள் ஒற்றுமையாக இருப்பதைப்போல்

காட்டிக் கொள்வார்கள். இதுவா நாகரீகம்? இந்த வழியிலே நம்மவர்களும் சென்று அநாகரீகமான குடும்ப வாழ்வில் தள்ளப்பட்டு, மனித நிலையிலிருந்து விலங்கு நிலைக்குச் செல்லுகிறார்கள்.

நல்ல வழியிலிருந்து மேலும் நல்ல வழிக்குச் செல்ல வேண்டுமே தவிர நல்லதிலிருந்து தீயவழிக்குச் செல்லலாமா? மேலை நாட்டினர் புனிதமான குடும்ப உறவை நம்மிடமிருந்து கற்றுக் கொள்ளுமளவுக்கு நாம் வாழ்ந்து காட்டுவதை விட்டு விட்டு பண்பு இல்லாத வாழ்வை நாம் வாழத் தலைப்படலாமா? நாம் ஆன்மீகத்தையும் பண்பட்ட குடும்ப வாழ்வையும் மீண்டும் கடைப்பிடிப்பதனால் தமிழ் இனம் இழந்து கொண்டிருக்கும் மதிப்பை மீண்டும் நிலைநாட்டலாமே. **எமது இனத்தின் எதிர்கால முன்னேற்றம் எமது பெண்களின் கைகளிலே தான் உள்ளது.**

எதிர்காலத் தமிழ்வாரிசுகளை உருவாக்கப்போகும் அன்னையர்கள் இன்று சிறுமிகளாக இருக்கிறார்கள். இன்றைய சிறுமிகள் நாளை அன்னையராகி அவர்களால் உருவாக்கப்படும் பிள்ளைகளால் நாளைய சமுதாயம் உருவாக்கப்படப் போகிறது. பெண்கள் அறிவை வளர்த்து சீர்வழியில் மனதைப் பண்படுத்தப் பழகிக் கொள்ள வேண்டும். ஒழுக்கம், பண்பு, அறிவு இவற்றை வளர்த்துக் கொள்ள வேண்டும். பத்துமாதம் பிள்ளையை வயிற்றிலே சுமக்கும் போது தாயின் அறிவு, தாயின் உணர்வுகள் எல்லாம் கருவிலே குழந்தைக்கு ஊட்டப்படுகிறது. தாயின் மனோநிலையை ஒட்டியே குழந்தையும் பிறந்து தாயோடு வளரும்போது தாயின் குணங்களாலே ஈர்க்கப்படுகிறது. 'தாயைப் போல பிள்ளை' எனும் பெரியோரின் தத்துவ வாக்கும் இந்த இயற்கை நடை முறையை அண்டியே வருகிறது.

பிள்ளைகள் நல்லவர்களாகவும் கெட்டவர் களாகவும் வளர்வது அன்னையின் வளர்ப்பில் தான். இதை விட்டு தந்தையைக் குறை கூறலாமா? பெண்கள் மிக முக்கியமானவர்கள். **வீட்டுக்கு, இனத்திற்கு, நாட்டுக்கு, உலகத்திற்கே பெண்கள் மிக முக்கியமானவர்கள்.** நல்ல பிள்ளைகளை அவர்கள் தான் பெற முடியும்! ஓர் இனத்தை பெண்களால் தான் முன்னேற்றமுடியும். சிறுமியில் இருந்து வயது முதிர்ந்த பாட்டியர் வரை உங்கள் எல்லோர் பாதங்களிலும் என் வணக்கத்தை செலுத்துகிறேன். உங்களில்தான் அன்னை பராசக்தி உள்ளாள். உங்களில் தான் படைக்கும் சக்தி அடங்கியுளது. தாய்மார்களே எம் இனமும் உலகமும் தர்மத்தின் வளர்ச்சிக்காக உங்களை நாடுகிறது. நல்ல பிள்ளைகளைப் பெற்றுத்தர உங்களை எதிர்பார்க்கிறது. ஆண்மையும் (பலமும்) ஆற்றலும் மிக்க ஆண்களையும் அறிவும் அடக்கமும் கொண்ட பெண்க ளையும் உருவாக்கித் தாருங்கள். அன்னிய மோகத்தால் அடிமைகளாக வாழாமல் உலகின் உயர்ந்த நாகரீகத்தின் வாரிசுகளாக உயர்ந்த சமூகப் பண்பாட்டை உலகுக்கு உணர்த்தும் உயர்ந்த இனத்தவர்களாக பூரண சுதந்திரம் கொண்டவர்களாக நாம் வாழவேண்டும். அன்னையரே! இருளில் இருந்து வெளிச்சத்துக்கு வாருங்கள். தேவகி அம்மையார் இறை உணர்வோடு இருந்ததால் கண்ணனைப் பெற்றாள். மேரிமாதா இறை உணர்விலே இருந்ததால் யேசுவைப் பெற்றாள் அன்னை பராசக்தியின் பிரதிநிதிகளாகிய உங்கள் மனதிலே அதர்மமும் தர்மமும் சேர்ந்துள்ளது. இந்த இரண்டில் எதை வெளிப்படுத்தப் போகிறீர்கள்?

உலகம் வேண்டுவது தர்மத்தைத் தான். இன்று அறிய முடியாமையால் (அறியாமை) ஆண்கள் பலர் பெண்களை அடிமைகளாக அடக்க முற்படுகிறார்கள். இப்படிப்படட அறிவீனர்களான ஆண்களைக் கேட்கிறேன், பெண் என்றால் என்ன விளையாட்டுப் பொருளா? மனைவி யை அடக்க நினைப்பவன் ஆண்மையும் அறிவும் இல்லாதவன், அதாவது பலவீனன். மனைவி மீது அன்பு செலுத்தி மனைவியின் சிறந்த சேவையைப் பெற்று குடும்பத்தை பாதுகாப்பவனே ஆண்மையும் அறிவும் நிறைந்த மனிதனாவான். மனைவி அடங்கி நடக்க வேண்டி யவள் அல்ல! அவள் அறிவோடும் அடக்கமாகவும் பணிவாகிய உயர்ந்த பண்போடும் கணவனையும் குடும்பத் தையும் வழி நடத்த வேண்டியவள். குடும்ப வாழ்க்கையின் உயர்ந்த நெறிகளைக் கற்று குடும்பத்தை சீரோடு நடத்தி குடும்பத்தினர் எல்லோரிடமும் மகிழ்வோடு வாழ்க்கை நடாத்துபவளே மனைவி. இதற்கு எதிர்மாறாக கொண்ட கோலத்தை குருவாலும் மாற்ற முடியாது எனும் அளவுக்கு அகங்காரம் கொண்ட மனைவியர் சிலர் இருக்கவே செய்வார்கள். இப்படிப்பட்ட பெண்களைக் குறை கூறுவதைவிட விலக்கி நடப்பது நல்லது. கண்ணகி உயர்ந்த நெறியோடு வாழ்ந்தாள். மாதவியும் உயர்ந்த நெறியில் வாழ்ந்ததனால் மணிமேகலை எனும் புனிதமான பெண்ணைப் பெற்றாள். இந்த மூன்று பெண்களின் உயர்ந்த வாழ்க்கையை அரசபோகத்தை கதுறந்து ஆண்டியாகி மனித நிலையிலிருந்து தெய்வ நிலைக்கு உயர்ந்த இளங்கோ அடிகள் காவியமாக படைத்தார். உயர்வுக்கு ஒழுக்கம் மிக மிக முக்கியம். ஒழுக்கம் தர்மத்தின் நுழை வாயில். ஒழுக்கம் இல்லாதவர்களுக்கு தர்மத்தின் கதவு மூடப்பட்டிருக்கும்.

பெண்கள் நல்ல அறிவைப் பெறுவதனால் ஒழுக்கத்தின் முக்கியத்தை அறிய முடியும். நல்லோர்களின் நூல்களைப் படிப்பதாலும் உயர்ந்தவர்கள், நல்லவர்கள் மகான்கள் ஆகியோரின் தொடர்புகளைப் பெறுவதாலும் நல்அறிவைப் பெறமுடியும். அன்னையரே காலமும் சூழ்நிலையும் நம்மை அறியாமை எனும் இருளிலே தள்ளி விட்டு விட்டது. நாம் இனி விழித்துக்கொள்ள வேண்டும். இன்று அநியாயமாக இளம் பிள்ளைகள் வழிதவறிச் செல்லு கிறார்கள். வசதி படைத்த நாட்டில் எமது இளைஞர்கள் குற்றச் செயல்களில் ஈடுபடுகிறார்கள். தமிழ் மகனோ! தமிழ் மகளோ! பிழை செய்தால் தமிழ் இனத்துக்கே கேடும், அவமானமுமாகும்! நல்ல பிள்ளைகளை உரு வாக்கும் பொறுப்பு அன்னையருடையதே மகிமை பொருந்திய அன்னையரே அன்னை பராசக்தியின் பிரதி

வடிவங்களே, மீண்டும் உங்கள் பாதங்களில் எனது வணக்கத்தை செலுத்துகிறேன். உங்கள் அறிவு பிரகாச மடைந்து, அன்பாகிய மின்சாரத்தைப் பாய்ச்சி நல்அறிவோடு உங்கள் உள்ளங்களில் நல் உணர்வுகளை வளர்த்துக் கொள்வதால் அடக்கமாக வாழ்ந்து உயர்வடைவீர்கள் கணவர் உங்கள் மீது பலமடங்கு அன்பு செலுத்துவார். நீங்களும் அன்பாய் இருப்பீர்கள். பிள்ளைகளும் உயர்ந்த வர்களாகவும் சான்றோராகவும் வல்லவராகவும் முன்னேற்றம் காண்பார்கள்.

பெண்கள் தமது மகிமையையும் முக்கியத் துவத்தையும் உணரும் போது அவர்களிடம் தெய்வீகம் வெளிப்படுகிறது. உயர்ந்த ஞானமுள்ள பெண் தனது கணவனைத் தெய்வமாகக் காண்கிறாள். 'தெய்வம் தொழாள் கொழுநற் தொழுதெளுவாள் பெய்யெனப் பெய்யும் மழை' என குறள் கூறுகிறது. கணவனின் பாதங்களைத் தொழுகின்ற பெண் உயர்ந்த ஞானத்தையும் சகல சௌபாக்கியங்களையும் பெறுகிறாள் அவள் நினைப்பது நடக்கும்! அவள் சொல்வது நடக்கும்!

கணவனை வணங்கும் பெண்கள் அன்னை பார்வதிக்கு நிகரான பெரும் சக்தியைப் பெறுகிறார்கள். ஆண்கள் பெரும் தவம் செய்து பெறக்கூடிய தெய்வீக சக்தியைப் பெண்கள் கணவனை வணங்குவதாலேயே சுலபமாகப் பெற்றுவிடுகிறார்கள். மனித உடலை உருவாக்கும் சக்தி, பிள்ளைகளைப் பராமரிக்கும் சக்தி. குடும்பத்தை சீரோடும் நடாத்தும் சக்தி, இவையெல்லாம் தெய்வீக சக்தி இவை பெண்களிடம் தான் இருக்கிறது. அன்னை பராசக்தி தனது ஆற்றலையெல்லாம் பெண்கள் மூலமாக வெளிப்படுத்துகிறாள். பெண்கள் தங்களை உணர்ந்துகொண்டால் அளப்பரிய நன்மைகள் நமக்குக் கிடைக்கும். அன்னையரின் மகிமைகளை ஆடவர்கள் அறிவாரோ. அன்னையரே உங்கள் சக்தி ஒளி சுடர்விட்டுப் பிரகாசிக்கட்டும். எமது இனத்தின் உயர்வு உங்களிடம் தான் உள்ளது. உண்மை அறியாத ஆடவர்கள் உங்களை அடக்கி வாழ நினைக்கிறார்கள். உங்கள் அறிவுச்சுடரால் ஆடவரைத் தெளிவடையச் செய்யுங்கள். எந்த வீட்டிலே பெண் அடக்கப்படுகிறாளோ அந்த வீட்டில் மங்களம் இருக்காது. எந்த வீட்டில் ஆண் அடக்கப்படுகிறானோ அங்கே மகிழ்ச்சி இருக்காது. இரண்டு நிலையும் அறிவீனத்தால் ஏற்படுகிறது.

நாம் நல்லதை அறிய வேண்டும், அறிந்ததை உணரவேண்டும், உணர்ந்ததை செயல்படுத்த வேண்டும்.

என்னை ஈன்றவளுக்கு முதல் வணக்கம் மற்றும் ஏனைய தாய்மார்களுக்கு அனேக வணக்கங்கள்.

உங்கள் அடியவனான

-அடியார் விபுலானந்தா-

29ம் பக்கத் தொடர்ச்சி

**8. திகிலடைந்தகுரலில் – அவன்**
**திகைப்படைந்த குரலில்**
**"மறை காட்டும் இறையே! – என்னை**
**மறந்து விட்டீர் போலும்!**
**கரையில் ஒரு சோடி – மணலில்**
**இடையிடையே மறைய**
**இறையே! எங்கு சென்றீர்? – உமது**
**அடிச்சுவடு எங்கே??...**

**9. அருளுந் தரல் வேண்டுமே – என**
**அடி பணிந்து நின்றேன்**
**கருணை காட்டவில்லை – உந்தன்**
**கருணை எங்கே போச்சு?**
**இடரும் வந்தபோது – என்னோடு**
**இணைந்து வரவில்லை**
**கருணை காட்டவில்லை – உமது**
**கருணை அருள் எங்கே??"....**

**10. பிறப்பறுக்கும் இறையை – அந்தப்**
**பித்தடைந்த மனிதன்**
**குறை சொல்லிக் கேட்டான் – பெருங்**
**குறை நிறைந்த மனிதன்**
**மறை நான்கின் பொருளை – அந்த**
**நிறை இறையை, மனிதன்**
**முறை தவறிக் கேட்டின் – அந்த**
**மதியிழந்த மனிதன்!!...**

**11. "மறையும் அந்தச்சுவடு – என்னால்**
**மறைக்கப்படவில்லை**
**மறையும் அந்தச் சுவடு – துயர்**
**நிறைந்த உனது சுவடு!**
**இடரும் வந்தபோது – தோளிற்**
**சுமந்து வந்தேன் உன்னை:**
**தரையில் ஆழ்ந்த சுவடு – பாரம்**
**தூக்கிச் சுமந்த சுவடு"**

**சிவ. விமலேஸ்வரன்**
**ஸ்காபரோ, கனடா**

# MADONNA'S 1 HR
## FOTO STUDIO

- Free fil 1Hr. processing
- Passport Photos ready in 3 Min.
- Portraits ready in 1 hr.
- Reprints in 30 Min.
- We print 5 x 7, 4 x 6, 3 x 5 color prints
- Copy works, Print ready in 1Hr.
- Enlargement up to 20' x 30'
- Wedding details at counter
- Color Slides Film Processing
- Black & White film Developing & Printing
- Transfer Slides & 8mm. to Video
- Large Selection of Frames, Cameras, Albums and Accessories
- PAL<>NTSC<>SECAM Video Transfer
- Business Accounts Welcome.

3850 Finch Ave. East
(Finch & Kennedy)
Suite #G01A, Scarborough, Ont
**Tel: (416) 754-0326**

**FOTO SHINE 1 HR**
240 WELLESLY STREET EAST, UNIT #4
TORONTO, ONTARIO, M4X 1G5
**Tel: (416) 515-8714**



# TECHONOS AUTOMOTIVE INC.
## AUTO REPAIR CENTRE

சகலவிதமான வாகன திருத்த வேலைகளுக்கும்,
குறைந்த செலவில் நிறைந்த பயன் அடைவதற்கு எம்மை அழையுங்கள்

**OIL & FILTER CHANGE ONLY**
**$18.95**



- Vehicle Certification
- Mechanical & Electrical Repairs
- Computer Diagnosis on Fuel Injection
- Electronic Ignition System
- Specializing in VOLVO & HYUNDAI.
- Tire Repairs & Wheel Balancing
- FREE Inspection & Proper Advise

இலவச பரிசோதனையுடன் முறையான
ஆலோசனைகளுக்கு அழையுங்கள்.

**1253 Kennedy Road, Scarborough, Ont. Tel: (416) 285-8066**

Competitive Automotive Services & Repairs by Experienced & Fully LicensedClass 'A' Mechanics

# பாரந் தூக்கிச் சுமந்த சுவடு



1. மாலை வரை தேடியும் – ஒரு
வேலைகிடைக்கா வேளை
ஆலை பல நடந்தும் – மிக
அலுத்துப் போன வேளை
வேலை இல்லை என்ற – வெறுந்
தோல்வி மிஞ்சும் வேளை
வாழ ஒரு வேலை – எதுவும்
வந்திடாத வேளை.....

2. இரவும் வந்து இணைக்க – அந்த
இருளில் மனக்கவலை
வரவு சிறிதும் இல்லை – இதனால்
மருவி வருங் கவலை
சிரம் நிறைந்த கவலை – சிறிதும்
துயில் வராத கவலை
கரங் குவித்து நின்றான் – அவன்
கண்ணிறையக் கவலை...

3. இறை அருளை வேண்டி – அவன்
இறைஞ்சி அருள் வேண்டி
மறை நான்கு சொல்லும் – அந்த
மாதவனை வேண்டி
கரும் நீல வர்ணன் – அந்தக்
கண்ணன் பதம் வேண்டி
பாற் கடலிற் துயிலும் – அந்தப்
பரமன் அருள் வேண்டி....

4. 'கருணை காட்ட வேணும் – கண்ணா
கவலை நீக்க வேணும்
அருளுந் தரல் வேணும் – உந்தன்
அடிமை என்றும் அடிமை'....
இரவில் அவன் துயிலில் – ஒரு
இனிப்பு வாய்ந்த கனவு
விரியும் மனத்திரையில் – ஒரு
அருள் சுரக்கும் கனவு!!!....

5. கனவில் ஒளி மிளிரும் – ஒரு
கடற்கரையின் அருகில்
மனதைக் கவர் மணலே – ஈரம்
மறைந்திடாத திடரே
கனவில் ஒரு குரலும் – மிகக்
கனிவு பொங்க ஒலித்து
"மனக்கவலை அறிவேன் – உனது
வருத்தம் அதை உணர்வேன்...

6. ஈரமான மணலே – உனது
இறந்த கால வாழ்வு!
ஈரமான மணலில் – அங்கு
ஒருங்கிணைந்து செல்லும்
இரு சோடி அடிகள் – அதில்
இணைந்து செல்லும் மெருகு!
ஒரு சோடி உனது – மணலில்
மறு சோடி எனது"....

இணைந்த இரு சோடி – ஈர
மணற் தரையிற் கண்டு
உறவு படும் பிணைப்பில் – உள்ளம்
உணர்வு பொங்கக் களித்து,
இருசோடிச் சுவட்டை – சிறிது
உற்றுப் பார்த்த போது
மறையும் ஒரு சோடி! – ஆழப்
பதியும் மறு சோடி!!...

27ம் பக்கம் பார்க்க

# இராஜயோகம்

தொடர் ஆக்கம்

கடந்த இதழில் பிராணாயாமம் பயில்வதைப் பற்றியும் அதன் நன்மைகள் பற்றியும் விளக்கியிருந்தோம். அடுத்து இராஜ யோகத்தின் ஐந்தாவது படியான பிரத்தி யாகாரம் ஆறாவது படியான தாரணை இரண்டையும் பற்றிய விளக்கங்களைப் பார்ப்போம்.

உங்களிடம் எதையும் குருட்டுத்தனமாக நம்பும்படி சொல்பவனை எவ்வளவு பெரியவனாகவும் நல்ல வனாகவும் இருந்தாலும் சரி அவனை அப்படியே தவிர்த்து விடவேண்டும் என சுவாமி விவேகானந்தர் கூறுகிறார்.

எந்த விடயத்தையும் நாம் எமது அறிவோடும் அனுபவத்தோடும் அலசி ஆராய்ந்து ஏற்றுக் கொள்ள வேண்டும். இறைவன் சொர்க்கத்தில் இருப்பதாகவும் அது பைபிளில் கூறப்பட்டிருப்பதாகவும் இதை நம்பும்படியும் சில கூட்டத்தினர் அடித்துக் கூறுகிறார்கள். ஆனால் பைபிளில் இன்னொரு வாக்கியம் 'உனது சரீரமே இறைவன் ஆலயம் உனது உள்ளமே அவரது வாசஸ்தலம்' என யேசு கூறியதை விளக்கும் ஆற்றல் அந்தக் கூட்டத்தினரிடம் இல்லை. பைபிளில் இருப்பதை நம்பும்படி கூறி மக்களின் சுயஅறிவை மழுங்கடித்து விடுகிறார்கள். இப்படியான கூட்டத்தினர் மக்களுக்கு நன்மை புரிவதாக நினைத்து பல ஆயிரக்கணக்கான மக்களை மன ஆற்றலை இழக்கச் செய்கிறார்கள்.

நாம் நல்லதை அறிந்தால் மட்டும் போதாது, அதை அனுபவத்தோடு அலசிப்பார்த்து உணரவேண்டும். அறிந்ததை உணரும்போது தான் உண்மையான அனுபவம் ஏற்படுகிறது. நாம் உண்மையை அனுபவத்தில் காணவேண்டும் யோகத்தை வாசித்தால் மட்டும் போதாது. அதைப் பயில வேண்டும். யோகம் நமது மனதை, புலன்களை செயல்பாடுகளையெல்லாம் ஒழுங்கு படுத்துகிறது. ஒழுங்குபடுத்தப்பட்ட மனம் தூய்மையான ஆன்மாவைக் கண்டு அனுபவிக்கிறது. புறப்பொருள்களில் நாட்டம் கொண்டு அலைந்தமனம் பயிற்சியால் ஒழுங்கு படுத்தப்பட்டு தெளிவடைந்து பேரின்பமாகிய ஆன்ம சுகத்தை அனுபவிக்கிறது. 'தெள்ளத் தெளிந்தார்க்கு சீவன் சிவலிங்கம்' என திருமூலர் திருமந்திரத்தில் (1792ம் மந்திரம் 3ம்அடி) கூறுகிறார். மனம்தெளிவடையும்போது சீவனே சிவனாக இருப்பதை தெளிவடைந்த மனம் அறிகிறது. மனத்தெளிவின்பின் ஞானம் ஊற்றெடுத்துப் பாயும்.

மனதை ஒழுங்குபடுத்தும் பயிற்சியில் ஒன்றே பிரத்தியாகாரம்.

கண்டுகண்டுள்ளே கருத்துற வாங்கிடிற்
கொண்டுகொண்டுள்ளே குணம்பல காணலாம்
பண்டுகந் தெங்கும் பழமறை தேடியை
இன்று கண்டிங்கே இருக்கலுமாமே.

-(திருமந்திரம்-559)

மேலுள்ள திருமந்திரத்தில் பிரத்தியாகாரத்தின் பயன் விளக்கப்படுகிறது. பழங்காலம்தொட்டு வேதங்கள் தேடும் சிவனை மனதின்துணைகொண்டு நம் உள்ளே காணலாம், கண்டு இன்புறலாம் என்கிறார். இது இக் காலத்தில் முடியுமா? ஆம் ஆர்வத்தோடு முயல்பவர்க்கு எக்காலத்திலும் முடியக்கூடியதே. முதலில் பயிற்சி முறையினைத் தெளிவாக அறியவேண்டும். இயமம் நியமம் ஆகிய பயிற்சிக்குப் பின் ஆசனம் கைகூடப் பெற்றவர்கள் நாடிசுத்தியால் நரம்பு மண்டலங்களை ஒழுங்குபடுத்திப் பழகிய பின் பிராணாயாத்தால் பிராணசக்தியைச் சேமிக்கப்பழகிய பின் மனம் பிரத்தியாகாரம் செய்யத் தயாராகிறது.

## பிரத்தியாகாரம்

ஒவ்வொரு இந்திரியங்களும் உட்கருவிகள் மூலமாக இயங்குகின்றன. உட்கருவிகள் மூளையின் மையங்கள் மூலமாக இயங்குகின்றன. மனம் மூளை யிலுள்ள பொறிகளின் மையங்கள் மூலமாக வெளிப் பொருள்களின் காட்சியைப் பெறுகிறது.

மனதை நாம் வேண்டிய போது நரம்புமண்ட லங்களோடு இணையவோ பிரிக்கவோ செய்யும் ஆற்றலைப் பெற்றால் அதுவே பிரத்தியாகாரம். 'பிரத்தியாகாரம் என்பது மனதின் ஆற்றல்களைப் பொறிகள் மூலமாக புறத்தில் போய் வீணாக செலவழியாமல் அவற்றைத் தடுத்து அவற்றைக் குவித்தல் என்பதாகும். இதைச் செய்ய முடிந்தாலே நாம் நல்ஒழுக்கமும் நற்குணமும் வாய்க்கப் பெற்று முக்கதி பெறும் மார்க்கத்தில் சிறந்த முன்னேற் றத்தைக் காணமுடியும். அதற்குமுன் நாம் வெறும் இயந்தி ரங்களே என சுவாமி விவேகானந்தர் கூறுகிறார்.

மனதை முதலில் நமது கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவரவேண்டும். இதற்கு ஆசனத்தில் அமர்ந்து தினமும் பயிற்சி செய்யவேண்டும். மனதைக் கட்டுப்படுத்த முயலும்போது பல்வேறு நினைவுகள் எழுந்து கொண்டி ருக்கும் அவற்றை பொறுமையாக இருந்து கவனிக்க வேண்டும். இடையிடையே நான் ஆன்மா, நான்

தூய்மையானவன் எனும் நினைப்பை மனதில் உறுதிப் படுத்தவேண்டும். தொடர்ச்சியான பயிற்சியால் தேவையற்ற நினைவுகளில் இருந்து மனம் விடுபடத்தொடங்கி அமைதி பெறும். அமைதி பெற்ற மனதை இலகுவாகக் கட்டுப் படுத்தமுடியும். விரும்பியபோது புலன்களுக்கான பொறி களின் மையங்களோடு மனதை இணைக்கவோ அல்லது விடுபடவோ முடியும். இந்தப் பயிற்சியில் முன்னேற்றம் கண்டபின் தாரணையைப் பயிலவேண்டும்.

## தாரணை

தாரணை என்பது ஒரு பொருளை ஏனையவற்றி லிருந்து பிரித்து அப்பொருளின் மீது மனதை குவிய வைத்தலாகும். அதாவது நிலையற்றதிலிருந்து மனதை நிலையான பொருளுக்குக் கொண்டு செல்லலாகும்.

அரித்த வுடலைஐம் பூதத்தில் வைத்துப்
பொருத்தஐம் பூதஞ்சத் தாதியிற் போந்து
தெரித்த மனாதிசத் தாதியிற் செல்லத்
தரித்தது தாரணை தற்பரத் தோடே
(திருமந்திரம் - 577)

ஆற்றுவெள்ளம் கரையினை அரித்துப் பாழாக்குவது போன்று புலப்பொருள் வெள்ளம் உடம்பினை அரித்துப் பாழாக்குகிறது. உடல் பஞ்சபூதங்களால் தோன்றியதுபோல் மீண்டும் பஞ்சபூதங்களோடு ஒடுங்கி விடுவதைப்பற்றி சிந்திக்கவேண்டும். இந்த உண்மையை உணர உணர உலகம் நிலையாமையைப் பற்றிய உண்மை புலனாகும். உள்ளபொருளாகிய இறைவனே நிலையானவன் என்னும் தெளிவு உண்டாகும். தெளிவு உண்டாகும்போது உலகப் பற்றாகிய பொய்யான உணர்வுகள் அறுபடத்தொடங்கும். உடலை ஐம்பூதங்களில் ஒடுக்கி பூதத்தை எண்ணம் முதலிய அகப்புறக் கலன்களில் ஒடுக்கி, சித்தமாகிய மனதை ஆன்மாவில் ஒடுக்கும் போது சீவன் சிவகை இருக்கும் உண்மை தெளிவாகிறது. ஐம்புலன்களில் இருந்து விலக்கப் பழக்கப்பட்ட மனதை மேலும் உள்நோக்கி உட்கடந்து சென்று ஆன்ம உணர்வை உணரும் நிலைக்கு மனதை செலுத்துவதே தாரணையாகும்.

எந்தப் பயிற்சியானாலும் முதலில் நம்பிக்கை வேண்டும். அடுத்தது ஆர்வம் வேண்டும் மூன்றாவதாக விடாமுயற்சி வேண்டும். நம்பிக்கை, ஆர்வம், விடாமுயற்சி இம்மூன்றும் சேரும்போதுதான் சித்தி அடைய முடியும். இராஜயோகப்பயிற்சிகளை நேரடியாகப் பயில விரும்புபவர்கள் பிரதி புதன்கிழமைகளில் சாமி அன் சன்ஸ் இல் நடைபெறும் சத்சங்கத்தில் கலந்து கொண்டு பயிலலாம்.

-தொடரும்............



# ஓராண்டு நினைவஞ்சலி

## ஈழத் தமிழினத்தின் நற்பண்புள்ள ஓர் அறிஞர் அமரர் திரு. செல்லத்துரை வேலாயுதபிள்ளை

(இளைப்பாறிய கல்வி அதிகாரி, பரீட்சை உதவி ஆணையாளர் இலங்கை)

| தோற்றம் | | மறைவு |
|---|---|---|
| 25 |  | 23 |
| 11 | | 08 |
| 1923 | | 1996 |

அமரர் திரு. செ. வேலாயுதம்பிள்ளை ஒரு சிறந்த கல்விமான் மட்டுமல்ல சிறந்த சான்றோனாகவும் வாழ்ந்தவர். அன்னை நேசமலரோடு இல்லறத்தை நல்லறமாகவும் நல்ல பிள்ளைகளைப் பெற்ற அவர்களை நல்வழிப்படுத்தி நல்ல பிள்ளைகளாகவும் கல்வி மான்களாகவும் வளர்த்தெடுத்த பெருமை கொண்ட தந்தையாகவும் அன்னாரின் பிள்ளைகளைச் சுமந்து பெற்று உயர்ந்த நிலைக்கு வளர்த்தெடுத்த பெருமைக்குரிய அன்னை நேசமலருக்கு ஈடுஇணையற்ற சிறந்த கணவராகவும் வாழ்ந்த பெரியார்

சுவாமி விபுலானந்தரின் நேரடி மாணவராகவும் அவரது சிறப்பு ஆசிகளைப் பெறும்பேறு பெற்றவராகவும் விளங்கினார். கேட்டபோது மனம்சலிக்காது மதம் சஞ்சிகைக்கு கட்டுரை எழுதிக்கொடுத்தும் மொழி பெயர்ப்பு உதவிகளும் செய்து கொடுத்தவர். அவர் உயர்ந்த பண்பாளராகவும் இல்லற ஞானியாகவும் விளங்கினார். இவரைப்போன்ற சான்றோர்கள் வாழ்வதால் தான் உலகம் நல்வழியில் நடக்கிறது. அன்னாரின் இழப்பு அவரது குடும்பத்தினருக்கு மட்டுமல்ல ஈழத் தமிழ் இனத்தவருக்கே பேரிழப்பாகும். அன்னை திருமதி வேலாயுதபிள்ளை நேசமலர் அவர்களுக்கும் மதிப்புமிக்க வேலாயுதபிள்ளை நேசமலர் தம்பதியர்களின் பிள்ளைச் செல்வங்களான திரு. சிவபாலன் (வைத்தியக் கலாநிதி, அமெரிக்கா) குடும்பத்தினர், திரு. நந்தபாலன் (வைத்தியக் கலாநிதி, இங்கிலாந்து) குடும்பத்தினருக்கும் திருமதி மஞ்சுளா ஜெயப்பிரகாசம் (வைத்தியக் கலாநிதி கனடா) குடும்பத்தினருக்கும் திரு. சிவகுமார் (கணக்காளர், கணணிப் பொறியியலாளர்) அவர்களுக்கும் மதம் சஞ்சிகை சார்பாக எமது நினைவாஞ்சலியைத் தெரிவிக்கிறோம்.

'வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான் உறையும்
தெய்வத்துள் வைக்கப்படும்' -(குறள்-50)

அன்னாரின் அன்புக்குப் பாத்திரமான
அடியார் விபுலானந்தா

# ஆரோக்கிய வாழ்வு

-சுவாமி சிவானந்தர் அருளியது-

## உணவு

ஒருவர் தனக்குப் பசி எடுக்கும் பொழுதுதான் சாப்பிடவேண்டும். கடிகாரத்தில் எழுப்பப்படும் மணியின் ஒலிகேட்டு உணவருந்தச் செல்லக்கூடாது. ஒரு மனிதன் காலையிலும், மாலையிலும் மட்டுமே உணவருந்த வேண்டும். என்பது பொதுவான விதிமுறையாகும். இந்த இரண்டு உணவுவேளைகளுக்கு இடைப்பட்ட நேரத்தில் எந்தவகை உணவையும் எடுத்துக் கொள்ளக் கூடாது. காலையிலும், மாலையிலும் அக்னி ஷோத்ர யாகம் நடத்தப்படுவது போல காலையிலும், மாலையிலும் உண்வைச் சாப்பிடவேண்டும். பசி என்பது ஜடராக்னி. உணவு அந்த ஜடராக்கினிக்கு ஆஹுதியாகத் தரப்படுகிறது.

சாப்பிடும்போது முதலில் இனிப்புப் பொருட்களை எடுத்துக் கொள்ளவேண்டும். அதன்பிறகு உப்புக் கலந்த பொருட்களையும், அதன்பிறகு புளிப்புச் சுவையுள்ள பொருள்களையும் எடுத்துக் கொள்ளவேண்டும். கசப்புச் சுவையுள்ள பொருள்களை இறுதியில் எடுத்துக் கொள்ள வேண்டும். இனிப்புப் பொருட்கள் வாயுவைக் கலைக்கக் கூடியவை. ஆகவே அவற்றை முதலில் எடுத்துக் கொள்ளவேண்டும். உப்பு மற்றும் புளிப்புச் சுவையுள்ள பொருட்கள் ஜீரண சக்தியை அதிகரிக்கக் கூடியவை. ஆகவே அவற்றை இடையில் எடுத்துக்கொள்ளவேண்டும். கசப்புச் சுவையுள்ள பொருட்கள் கபத்தைக் குறைக்கக் கூடியவை. ஆகவே அவற்றைக் கடைசியில் எடுத்துக் கொள்ளவேண்டும். நெய்யை முதலில் எடுத்தக் கொள்ள வேண்டும். அது வாயுவைக் கட்டுப்படுத்துகின்றது. சாப்பாட்டில் கடைசியாக எடுத்துக் கொள்ளக்கூடிய உணவுப்பொருள் மிக எளிதில் ஜீரணமாகக் கூடிய பொருளாக இருக்கவேண்டும்.

சாப்பிடுவதற்கு முன்பாக அதிகமாக தண்ணீர் அருந்தக்கூடாது. அது ஜீரண சக்தியை பலவீனப் படுத்துகிறது. சாப்பிடும்போது இடையில் அருந்தும் நீர் ஜீரண சக்தியை அதிகப்படுத்துகிறது. இறுதியில் எடுத்துக் கொள்ளப்படும் தண்ணீர் சாப்பிடுபவர் கொழுப்புச்சத்தை அதிகம் பெறச் செய்கிறது.

சாப்பிடும்போது அரைவயிறே உணவுப்பொருள் நிறைந்ததாக இருக்கவேண்டும். கால்வயிறு தண்ணீரால் நிரப்பப்படவேண்டும். இறுதிக்கால்வயிறு காற்றுக்காக விடப்படவேண்டும். பசித்த மனிதன் தண்ணீர் அருந்தக்கூடாது. தாகம் உடைய மனிதன் உணவருந்தக் கூடாது. தாகமுள்ள மனிதன் உணவருந்தினாலோ, பசியுள்ள மனிதன் தண்ணீர் அருந்தினாலோ அவர் தம் உடல்நலம் கெடும். (A Thirsty man if he eats food will develop gulmarog and a hungry man taking water will develop talodar). உணவருந்தும் வேளையில் அதிகமாகத் தண்ணீர் அருந்துவது உடல் நலத்துக்கு ஊறுவிளைவிக்கும். உணவு அருந்தும் போது தண்ணீர் அருந்த அவசியம் ஏற்பட்டால் சிறிதளவே அருந்தவேண்டும். அதிகமாக அருந்தினால் ஜீரண சக்தி பாதிக்கப்படும்.

மிதமிஞ்சி உண்பவருக்கு ஆயுள் குறைவு. தனது ஆரோக்கியம், பலம் உயிர்ச்சத்து அனைத்தையும் இழக் கிறார். பசியில்லாதபோது வயிறு நிறையச் சாப்பிடுவது பாவம்.

ஒரு ஞானி எடுத்துக் கொள்ளும் உணவின் அளவைப்போல் (8Grass) இருமடங்கு அளவில் வானப்ரஸ்தியும், நான்கு மடங்கு அளவில் இல்லறவாசியும் எடுத்துக் கொள்கிறார்கள். ஒரு பிரமச்சாரி மிகக் குறைவான அளவில் உணவு உட்கொள்ளவேண்டும். அதாவது மிகமிக அவசியமான அளவில் மட்டுமே உணவை எடுத்துக் கொள்ளவேண்டும். ஞானி எடுத்துக் கொள்ளும் உணவின் அளவில் எட்டில் ஒரு பங்கு ஒரு கோழிமுட்டை அளவி னதாக இருக்கும். (A grass is equal to the size of an egg of a hen)

சிறிதளவு தயிருடன் உப்புக் கலந்து உட்கொள்ளுவது உடல் நலத்துக்க உகந்தது.

அமைதியான இடத்தில் சாப்பிட வேண்டும். சாப்பிடுபவர் பரபரப்புடன் மற்றம் கவலையுடன் சாப்பிடக் கூடாது. சாப்பிடும்போது பேசக்கூடாது. இது உடல் நலத்தைப் பெருக்கும். பரபரப்புடனும், கவலையுடனும் சாப்பிடுவது ஆரோக்கியத்தைக் கெடுத்து காலப்போக்கில் நோய்வாய்ப்பட வழிவகுக்கிறது.

சாப்பாட்டின் நிறைவில் ஒரு சிறிதளவு தண்ணீர் அருந்திவிட்டு (ஆசமனம்) எழுந்திருக்கவேண்டும். சாப்பிட்டவர் தண்ணீரால் வாயை நன்றாகக் கழுவவேண்டும். வாயிலும், பற்களிலும் ஒட்டிக்கொண்டிருக்கும் உணவுப் பொருட்களை அகற்றவேண்டும். இருகைகளையும் குளிர்நீரில் கழுவவேண்டும். இரு கைகளையும் ஒன்றோ டொன்று தேய்த்து கைகளை கண்களில் வைத்துக் கொள்ளவேண்டும். இப்படிச் செய்தால் உங்களின் கண்நோய் (Timira) நீங்கும்.

## உறக்கம்

வடக்கில் தலைவைத்து உறங்கக்கூடாது. தெற்கில் தலைவைத்துப் படுத்தால் ஆயுள் நீடிக்கும். மேற்கில் தலைவைத்துப் படுத்தால் இரவில் கனவு வரும். கிழக்கில் தலை வைத்துப் படுத்தால் செல்வம் பெருகும்.

உறங்குவதற்கு முன்னதாக அகஸ்தியர், அஸ்திகர், கபிலர், மாதவர், முசுகுண்டர் ஆகிய மகான் களின் பெயர்களை ஜெயம் செய்யுங்கள் நல்ல உறக்கம் வரும்.

## உடல் உறவு

மாதவிலக்குக்கு பின் முதல் நான்கு நாட்களுக்கு உடல் உறவு கொள்ளக்கூடாது. பௌர்ணமி அல்லது

அமாவாசைக்குப பிறகு 8வது, 14வது, 15வது நாட்களிலும், இறந்த பெற்றோரின் சிரார்த்த தினங்களிலும், பொங்கல் நாளிலும், பகல்பொழுதிலும், நள்ளிரவிலும், கிரகண காலத்திலும் உடல் உறவு கொள்ளக்கூடாது. காலையில் உடல்உறவு கொள்வது உடல்நலத்தைப் பாதிக்கும்.

பதினைந்து நாட்களுக்கு ஒருமுறை உடல் உறவுகொண்டு சிற்றின்பத்தில் உள்ள விருப்பத்தைப் பூர்த்தி செய்து கொள்ளலாம் என்று சுஸ்ருதர் கூறுகிறார்.

வயிறு நிறையச் சாப்பிட்டிருப்பவர்களும், பசியோடு இருப்பவர்களும், தாகத்தோடு இருப்பவர்களும், மலம் கழிக்கவேண்டிய நெருக்கடியில் இருப்பவர்களும் உடல் உறவில் ஈடுபடக்கூடாது.

சுவாசம் வலது நாசியின் வழியாக நிகழும்போது, உடல்உறவு கொள்ள வேண்டும். உடல்உறவுக்குப் பின் கை, கால்களையும், மற்ற அவயவங்களையும் தண்ணீரால் சுத்தப்படுத்திக் கொண்டு பால் குடிக்கவும்.

உடல் உறவுக்குப்பின் உடற்பயிற்சி செய்வது உடல் நலத்தைப் பாதிக்கும்.

பகற்பொழுதில் உடல் உறவு கொள்ளுவது ஆயுளைக் குறைக்கும்.

-சுவாமி சிவானந்தர்-

## நீண்ட ஆயுள்

சிரஞ்சீவிகளான அசுவத்தாமன், பலி, வியாசர், ஹனுமான், மார்க்கண்டேயன் ஆகியோரின் பெயர்களை ஜபம் செய்யுங்கள். நீங்கள் நீண்ட ஆயுளைப் பெறுவீர்கள்

-சுவாமி சிவானந்தர்-

## இஞ்சி

இஞ்சி கைகண்ட மருந்தாக பயன்படுகிறது. வீடுகளில் எப்போதும் இஞ்சியிருக்கும். இஞ்சியினால் ஏற்படும் நன்மைகளை மேலும் அறிவோம். இஞ்சி உடலுக்கு உஸ்ணத்தைக் கொடுக்கிறது. அசட்டு வாய்வை அகற்றும் தன்மை கொண்டது. செமிபாடு உண்டாக்கும். உமிழ்நீரைப் பெருக்கும். பசியைத் தூண்டும். இருமலைக் கூட குணப்படுத்தும் தன்மை உண்டு. தேனில் இஞ்சியினை கீறாக கீறிப் போட்டு அது நன்றாக ஊறிய பின்னர் அதனை தினமும் சிறிதளவு உண்டுவர நரை திரை மூப்புக்கள் அற்று வாழலாம்.

இஞ்சியினைத் தேனுறல் செய்து சாப்பிட்டுவர வயிற்றுவலி, வயிற்றுப் பொருமல் குடல்வலி ஆகியன சரியாகும். நீரிழிவு நோய்க்கு இஞ்சிச் சாறும், கற்கண்டும் சேர்த்துக் கொடுக்கலாம். இஞ்சிச்சாறும் வெண்காயமும் சமமாக எடுத்து கலந்து கொடுக்க வாந்தி ஓங்காளம் ஆகியன நீங்கும். இஞ்சியினை பாலில் இரைத்து கழற்சிக்காய் அளவு 18மி லீட்டர் பாலில் கலந்து பருக இருமல் இரைப்பு ஆகியன நீங்கும்.

## பேரீச்சம்பழம்

பேரீச்சம்பழம் ஆஸ்துமா நோயாளர்கள் சாப்பிட்டு வந்தால் நல்ல உடல் முன்னேற்றம் காணப்படும். இரத்த விருத்தி உண்டாகும்.

## உழுந்து

உழுந்து உடலுக்கு குளிர்மையை உண்டு பண்ணுகிறது. காம உணர்வை உண்டாக்கும் பாலைப் பெருக்கும். நரம்புகளை உரமாக்கிறது. உடல்பலத்தைக் கொடுக்கிறது. உழுந்தை நீரில் ஊற வைத்து எடுத்து நீரைப் பருகினால் மூத்திர சம்பந்தமான வியாதிகள் போகும்.

## கற்பூரவள்ளி

கற்பூரவள்ளி உடலுக்கு உஸ்ணமுண்டாக்கி வியர்வையை பெருக்குகிறது. சளியை அகற்றுகிறது. கற்பூரவள்ளி இலைச்சாற்றுடன் கற்கண்டு சேர்த்து குழந்தைகளுக்கு உண்டாகும் இருமலுக்கு கொடுக்கலாம். சாற்றினை நல்லெண்ணெய்யுடன் சேர்த்து தலைக்கு தடவிவர மூக்கு நீர் பாய்தல் தீரும். இதனை பச்சையாக பிழிந்து பருகலாம். இருமல் நீர்க்கோவை சளி ஆகியன நீங்குகிறது.

## குங்குமப்பூ

குங்குமப்பூவின் மகரந்தத் தாள்களே மருந்திற்கு பயன்படுத்தபடுபவை ஆகும். இது செம்மஞ்சள் நிறம் கொண்டது. இதனை நீரிலிட்டால் செம்மஞ்சள் நிறமாக மாறும். இப்பூண்டு ஒருவித வாசனையுடன் மினுமினுப்பாக இருக்கும்.

கற்பிணித் தாய்மார்கள் குங்குமப் பூவினை வெற்றிலையோடோ அல்லது பாலில் இட்டுக்காச்சி அருந்தினால் பிள்ளை அழகாகவும் பிரசவ வலி இல்லாமலும் பிறக்கும். இதனால் சூதகக் கட்டு சூதகவலி ஆகியன நீங்கும்.

## பெருங்காயம்

அசட்டு வாய்வு நீக்கப்படுகிறது. புழுக்கொல்லி, மலத்தை இளகச் செய்கிறது. காமத்தை அதிகரிக்கிறது. சீரண மின்மையைக் குணப்படுத்துகிறது. இது ஆப்கானிஸ்தான் பஞ்சாப், காஷ்மீர் பகுதிகளில் தன்னிச்சையாக வளருகின்ற ஒரு வகை செடியின் பால் அல்லது பிசினே பெருங்காயமாகும். இந்தியர்கள் இதனைப் பல்நூற்றாண்டுகளாகப் பயன்படுத்தி வருகிறார்கள். இதில் மஞ்சள் நிறமுடையது எங்கும் கிடைக்கிறது. வெண்மை நிறம் கொண்ட பெருங்காயமும் உண்டு. (சோமகாயம்) பெயர் இது மிக காரம். பெருங்காயம் நரம்பினை வெப்பமாக்கி காம உணர்வினைத் தூண்டுகிறது. பெருங்காயத்தினை உரைத்து மார்பின்மீது பற்றிட குழந்தைக்கு உண்டாகும் கக்குவான் போகும். பெருங்காயத்தினைப் பொரித்து உள்ளியும் பனங்கட்டியும் சேர்த்து காலையில் சாப்பிட பிள்ளை பெற்ற பின் உண்டாகும் அழுக்கினை வெளிப்படுத்தும். சமிபாட்டு சிக்கலில் இருப்பவர்கள் இரண்டு அரிசி அளவு பெருங்காயத்தை வாயில்போட்டு நீரை ஊற்றினால் சிறிதுநேரத்தில் குணங்காணலாம். இரசத்துடன் சேர்த்து சாப்பிட்டால் வாய்வுக் கோளாறு நீங்கும்.

# புலம் பெயர்ந்த தமிழினத்தின் சிந்தனைக்கு சில துளிகள்

-திருமதி வளர்மதி ஜெயகாந்தன் -
(வேதாந்த ஞான மன்ற பத்திராதிபரும் சமயபாட ஆசிரியையும்)

தமிழினம் மிகத் தொன்மை வாயந்த பாரம் பரியத்தை தன்னகத்தே கொண்டது. தமிழ்மொழியும், சமயமும் ஒன்றுடன் ஒன்று இணைத்தே எம்மவரை பண்படுத்தி வந்துள்ளது.

'யாதும் ஊரே யாவரும் கேளீர்
தீதும் நன்றும் பிறர் தர வாரா'

என்ற அரும் பெரும் கருத்திற்கமைய கால மாற்றத்தினால் ஏற்பட்ட அசௌகரியங்களையும் மறந்து புலம்பெயர்ந்த இடங்களில் ஓர் உளப் பொருத்தப்பாட்டுடன் எம்மவர்கள் இயங்கிக் கொண்டிருப்பது பேருவகையான ஓர் செயற்பாடாகும். ஆனால் இன்று இங்குள்ள பல்கலாச்சார சமூகத்தினிடையே புரையோடிக் கொண்டிருக்கும் எமது இளம் சந்ததியிடம் எமது கலாச்சாரம் மேலோங்குமா என்பது கேள்விக்குரிய விடயமாகும்.

இந்நிலையில் ஓர் மாறுபாட்டை நிலைநிறுத்த வேண்டுமானால் எமது கலாச்சாரம் பற்றிய மன அழுத் தத்தை (Brain wash) ஏற்படுத்த வேண்டும். பெற்றோரும், சமூக நலவாதிகளுமே இதில் கூடிய பங்கெடுக்க வேண்டி யவர்கள். கனடாப் பெற்றோரைப் பொறுத்தவரை ஒரு நாளில் 24 மணிநேரம் சற்று நீடிக்க மாட்டாதா என்று அலுத்துக் கொள்பவர்கள் அநேகம். இந்நிலையில் பெற்றோரின் பங்களிப்பு கேள்விக்குரிய ஒன்றாக காணப் படுகின்றது. ஆகவே கனடா வேதாந்த ஞான மன்றம், இந்து சமயப் பேரவை, ராமகிருஷ்ண சேவாச்சிரமம், இந்து மாமன்றம், திருத்தொண்டன் நிலையம் போன்ற நிறுவனங்களே இப்பணியை செய்ய முயல்கின்றன. அதற்கு ஒவ்வொரு பெற்றோரும் தமது இயந்திர வாழ்வில் ஒரு சிறு தயவு செய்யவேண்டும்.

நமது சமூகத்தில் சமயங்கள் காணப்படுகின்றது. ஆனால் சமயிகள் காணப்படுகிறார்களா? சமயி என்பவன் யார்? பிற உயிர்களின் அழுகை ஒலி உனக்குள்ளிருந்து உனது அழுகை ஒலியாக எப்போ ஒலிக்கின்றதோ அப்போ நீ சமயி ஆகின்றாய். சமயங்கள் அரும் பெரும் தத்துவக் கருத்துக்களை தாங்கி ஆங்காங்கே தூங்கிக் கிடக்கின்றன. இந்து மதத்தில் ஓர் பகவத் கீதையும், கிறிஸ்தவ மதத்தில் ஓர் பைபிளும், இஸ்லாம் மதத்தில் ஓர் திருக்குர் ஆனும் அரும் பெரும் தத்துவக் கருத்துக்களைக் கொண்டிருந் தாலும் கூட அக் கருத்துக்களில் ஒரு சிலவற்றையாவது கைக்கொள்பவர் யார் என்பது வினாவுக்குரிய ஒரு விடயமாகும். ஒரு மனிதன் எவ்வளவு காலம் வாழ்கிறான் என்பதல்ல அவன் எப்படி வாழ்கின்றான் என்பதே முக்கியமான கருப்பொருளாய் கொண்டது இந்து சமயம்.

மனிதன் ஓர் சமூகப் பிராணி ஆவான். நாம் எவரும் தனித்து வாழமுடியாது. எமது நடத்தைகள் அதிக அளவில் சமூகத்துடன் தொடர்பானவையே. நாம் உடலியல் தேவை காரணமாக உண்ணுகிறோம். எனினும் நாம் உண்ணும் முறை உணவு வகை சமையல் முறைகள் எல்லாம் சமூகத்துடன் தொடர்பானவை. எவரும் சமூக உணர்வின்றி சுயமாக எதையும் செய்வதில்லை. எமது வாழ்க்கை முறைகளை பிறருடன் பகிர்ந்து வாழ்வதே நாகரீகத்தின் சிறப்பாகும். பிறருடன் திருப்தியான தொடர்பு கொள்ளும் வகையிலேயே எமது ஒழுக்கப்பண்புகளை விருத்தி செய்கிறோம். ஒத்துழைத்தல், சண்டையிடல், போட்டி, பின்பற்றல் ஆகியன மூலம் சமூகத்தில் எமக்கென இடத்தை வகிக்கின்றோம். இத் தொழிற்பாடு (Social action) எனப்படும், குடும்பம், பாடசாலை மூலமும், வெகுசன தொடர்பு சாதனங்களான வானொலி, தொலைக்காட்சி, திரைப்படம், பத்திரிகை, சஞ்சிகைகள் ஆகிய சமூக மயமாக்கும் சாதனங்கள் மூலமும் பிள்ளைகள் பெறும் அனுபவங்கள் அவர்களின் சமூக வளர்ச்சி, உளவளர்ச்சி, மனவெழுச்சி வளர்ச்சி ஆகியவற்றினின்றும் வேறாகக் கருதக் கூடாது. வளர்ச்சி என்பது இவை யாவும் ஒன்றிணைந்த ஒன்றாகும். ஆகவே பிள்ளைகளின் உடலமைப்பு, மனவெழுச்சி, முதிர்ச்சி, உளத்தொழிற்பாடு, தன்னைப்பற்றிய கருத்து (self concept) ஆகியன எல்லாம், அவர்கள் கொண்டுள்ள சமூகத் தொடர்புகளிலும் சமூக மனப்பான்மைகளிலும் தங்கியுள்ளது.

உண்மை, நேர்மை, அடக்கம், கீழ்ப்படிவு போன்ற அறநெறிகளைக் குழந்தைகள் தெரிந்தவர்களாக இருக்கவேண்டுமென விரும்புகிறோம். ஆரம்பத்தில் அவர்கள் பெற்றோரின் நடத்தைகளையும், மனப்பான்மைகளையும் பாவனை செய்தே கற்கின்றனர். இவ்வாறு எதைச் செய்யவேண்டும் எதைச் செய்யக்கூடாது எனப் பெற்றோர் கூறுவதன் மூலமும் நல்ல செயல்களுக்கு வெகுமதி, அங்கீகாரம், மெச்சுதல் ஆகியவற்றை வழங்குவதன் மூலமும் குழந்தைகளின் அறநெறி வளர்ச்சியடைந்து இறுதியில் தமக்கென ஓர் அறநெறிக் கோலத்தை ஆக்கிக் கொள்வர். இதற்கெதிராக அவர்கள் செயற்படும்போது குற்ற உணர்வு பெறுவர்.

ஓர் குழந்தை சமூக மயமாதலில் வெகுசன தொடர்புச் சாதனங்களே கூடுதலான பங்கு வகுக்கின்றது. கனடாவைப் பொறுத்தவரை அண்மைக் காலமாக வானொலி ஒலிபரப்புக்கள் காத்திரமான ஓர் பங்களிப்பை வழங்கிக் கொண்டிருந்தாலும் கூட அநேக குழந்தைகள் அதைக் கிரகிக்கக் கூடிய தன்மை இல்லாதிருப்பது வேதனையான விடயமாகும். தமிழ்ப் பத்திரிகைகளைப்

23ம் பக்கம் பார்க்க

# உங்கள் கேள்விகளுக்கு அடியாரின் பதில்கள்

**1. சைவசமயத்தை வளர்ப்பதற்கு நல்ல வழியைக் கூறமுடியுமா?**

**இ. சிவபாதம் - எத்தோபிக்கோ**

சைவசமயம் என்பது பூரணமான நிறைவான சமயம். உலகத்தில் இன்னும் ஆயிரம் சமயங்கள் தோன்றினாலும் சைவசமயம் இருந்துகொண்டே இருக்கும். இனிவரும் காலங்களில் பிறமதத்தவர்களும் குறிப்பாக மேலைத் தேசத்தவர்களும் சைவசமயக் கொள்கைகளால் ஈர்க்கப்படுவார்கள். அத்தோடு மேலைத்தேசத்தவர்கள். சைவசமத்தின் உண்மைகளை சுலபமாக உணரக்கூடிய மனோபக்குவத்தில் இருக்கிறார்கள். ஏனெனில் அவர்கள் பொய் சொல்வது மிகமிகக்குறைவு. பிறர்விடயங்களில் தலையிடுவதும் குறைவு உண்மையை அறிந்துகொண்டால் அதை முற்றும் முழுதாகக் கடைப்பிடிக்கும் ஆர்வம் அவர்களிடம் உண்டு. மனிதரை மனிதர் மதிக்கும் நல்ல மனப்பான்மையும் அதிக அளவில் உண்டு. குறிப்பாகச் சொல்லப்போனால் நல்ல பண்புகள் அவர்களிடம் உண்டு. நல்ல பண்பு உள்ளவர்களால் தான் சமயத்தில் முன்னேறமுடியும்.

கிறிஸ்தவ சமயமும் இஸ்லாமும் ஆட்சி அதிகாரங்களைப் பயன்படுத்தியும் சலுகைகளைக் காட்டியும் பிரச்சாரங்களாலும் மக்களைக் கவர்ந்திழுக்கின்றன. ஆனால் இந்துமதம் இத்தகைய முறைகளைக் கையாண்டது இல்லை என்றுதான் சொல்லலாம். ஆனால் எந்தவிதமான பிரச்சாரமும் இல்லாமல் உலகம் பூராகவும் பல லட்சக்க ணக்கான மக்கள் தாமாகவே இந்து சமயக் கொள்கைகளால் ஈர்க்கப்பட்டு இந்துக்களாக மாறி வருகிறார்கள்.

நீங்கள் சைவசமயத்தைக்குறிப்பிட்டர்கள். ஆனால் இன்றைய காலகட்டத்தில் சைவசமயம் என்றாலோ அல்லது வைஸ்ணவம் என்றாலோ பிறமத்தினர் இந்திய மதங்களை இந்து மதம் என்றே கூறுகின்றார்கள். பல பிரிவுகளாகிய சமயங்கள் வேற்றுமை விடுத்து ஒன்றாகிய சமயமே இந்துசமயம். வேற்றுமையில் ஒற்றுமை காண்பதுவே உண்மை ஞானம்.

நிறைநிலையாக உள்ள சைவசமயத்தை நாம் வளர்க்கமுடியாது. ஆனால் நாம் சிறந்த சைவசமயத் தவர்களாக வாழமுடியும். எமது சமய வாழ்வு சிறப்போடு இருந்தால் பிறமத்தினரும் எம்மைப் பின்பற்றுவார்கள். நாம் குறிபோடுவதாலோ, உருத்திராட்சம் அணிவதாலோ தேவாரம் பாடமாக்கிப் பாடுவதாலோ உண்மையான சைவர்களாக ஆகமாட்டோம்.

*வேடங்கடந்து விகிர்தன்றன் பான்மேவி*
*ஆடம்பரமின்றி ஆசா பாசஞ் செற்றுப்*
*பாடொன்ற பாசம் பசுத்துவம் பாழ்படச்*
*சாடுஞ் சிவபோதகர் சுத்த சைவரே*

*(திருமந்திரம் - ௧௪௨)*

திருக்கோல வேடங்கள் ஏதுமில்லாமல் மந்திரங்களின் உட்பொருளை அறிந்து ஆரவாரமில்லாமல் காமம், கோபம், ஆசை இல்லாமல் பாசங்களை விடுவிக்கும் திறனும், எல்லாவற்றிலும் சிவனை உணர்பவரே சுத்தசைவராவார் என்கிறார் திருமூலர்.

நான் எனதுகுடும்பம் என்ற நினைவோடு வாழுதல், ஆடு மாட்டைக் கட்டிப் போட்டால் கட்டிய கயிற்றின் நீளத்துக்கு தக்க வட்டம் போட்டுக் கொண்டு இருப்பது போலவே குடும்பத்துக்காக மட்டும் வாழுதல், ஒவ்வொருகுடும்பத்தினரும் சமூகத்துக்காகவும் நாட்டுக்காகவும் தமது பங்களிப்பை ஆற்றவேண்டும். பிறருக்கு துன்பம் செய்யாமலும் பிறர்க்கு உதவியாகவும் ஒவ்வொரு மனிதனிலும் சிவன் உறைகிறார் என்ற உண்மையை அறிந்து மனிதரை மதித்து வாழ்பவனே உண்மைச் சைவனாவான். உண்மைச் சைவர்கள் அதிகரித்தால் தான் சைவசமயம் உலகில் பரவும்.

இதைவிடுத்து அர்த்தம் புரியாமல்குறிபூசி, அர்த்தம் விளங்காமல் தேவாரம் பாடி அர்த்தம் விளங்காமல் திருவிழாக் கொண்டாடினால் நாங்கள் சைவராக இருக்கும் தகுதி உண்டா? உண்மை விளங்காத சைபர்களாக (0) இருப்பதால் யார் நம்மைப் பின்பற்றுவார்கள். சைவத்தைப் பரவிடாத தடைக்கல்லுகளாக இருக்கவேண்டுமா?

முன்பு தொழில்கள் மக்களின் கைகளில் இன்று தொழில்கள் இயந்திரங்களின் வலுவில். எனவே மனிதர்களைப் பிரிவுபடுத்தும் சைபர் (0)களாக நாம் வாழவேண்டுமா? நாம் ஒவ்வொரு ஜீவன்களுக்குள்ளும் சிவனைக் கண்டு வணங்கி வாழும் உண்மைச் சைவர்களாக வாழ்ந்து காட்டுவோமானால் உலகம் முழுவதும் வேகமாக சைவசமயம் பரவும்.

**2. உண்மையான குருவை எப்படிக கண்டு பிடிப்பது?**

**ச. அன்பழகன், ஸ்காபரோ**

தாரமும் குருவும் தலைவிதிப்பயன் என்பார்கள். உண்மையில் நல்ல குருவாய்ப்பதும் அவரவர் விதிப்பயனே. உண்மையில் குருவை அடைவதற்கு இறைவனிடம் பிரார்த்தனை செய்தல்வேண்டும். குரு கிடைக்கும் வரைக்கும் பெரியவர்களின் நூல்களைக் கற்க வேண்டும். கற்ற விடயங்களை கருத்துக்களை உணர்ந்து மனதிலே

பதியவிடவேண்டும். நல்ல விடயங்கள் மனதிலே ஆழமாகப் பதியப்பதிய உண்மை விளக்கம் ஏற்படும். ஓரளவாவது மனத்தூய்மையும் அறிவாற்றலும் உங்களிடம் வெளிப்படும் போது தான் உண்மையானகுருவை உங்களால் அடையாளம் கண்டு ஏற்கமுடியும்.

குருவை தரும்படி நீங்கள் இறைவனிம் பிரார்த்தித்து கேட்டால் இறைவன் நிச்சயமாகக் குருவை உங்களிடம் அனுப்புவார். அவரைகுருவாக அடையாளம் காணும் பக்குவம் இல்லாவிட்டால் தகுதியற்றவரைத்தான் குருவாக கொள்ள நேரும். மக்களுக்குள் பிரபல்யமுள்ள ஒரு சமயவாதியாகலாம் அல்லது குப்பைமேட்டில் நாய்களோடு எச்சிலையிலே சோற்றை வளித்துண்ணும் சித்தராக இருக்கலாம் அல்லது சாதாரணதுறவியாக இருக்கலாம். எப்படிப்பட்டவராக இருந்தாலும் உங்கள் தீராத ஐயப்பாட்டை யார் நீக்கிறாரோ யார் அதற்கு சிறந்த விடையளிக்கிறாரோ அவரே சிறந்தகுரு. விசர் செல்லப்பா என்று அழைக்கப்பட்டவரே யோகர் சுவாமியின் குருவானார். விவேகானந்தரின் குருவான ஸ்ரீராமகிருஷ்ணரும் பயித்தியக்காரன் என்று ஒரு நேரத்தில் சொல்லப்பட்டவரே.

உண்மையானகுரு உங்களுக்குக்கிடைத்துவிட்டால் அவரது கருணை உங்களை உயரவைக்கும், அவர் உங்கள் நலனுக்காகவும் ஆன்ம ஈடேற்றத்துக்கும் இறைவனிடம் பிரார்த்தனை செய்வார்.குருவும் இறைவனும் வேறல்ல என்ற உணர்வு சீடருக்கு வேண்டும். 'சீவனைச் சிவனாக்கி வைத்தான் எங்கள் குருநாதன் என்று யோகர்சுவாமி பாடினார். உண்மையிலேகுருவிடம் பக்தி அதிகரிக்குமளவுக்கு சீடர் தெய்வீக நிலைக்கு உயர்வடைகிறார். சீவனாக இருக்கும் சீடர் சிவனாக உயர்வதுகுருவின் திருவருளே.

நீங்கள் முயன்றால் மூன்றேநாளில் கடவுளைக் காணலாம் என்கிறார். ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஆனால் கடவுளைக் கண்டாலும் முக்தி மட்டும் கிடைக்காது. முக்தி கிடைப்பதற்கு குரு வேண்டும் எனவே நல்ல குருவை அடைவதற்கு இறைவன் அருள் வேண்டும். அதற்கு இறைவனைகுருவைத் தரும்படி பிரார்த்திக்கவேண்டும்.

**3. ஐயப்பன் ஆலயத்தில் பக்தர்களுக்கு மாலை அணிவித்துபோது மாலை அணிவதற்காக சென்றிருந்தேன். எனக்கு இது மூன்றாவது வருட மாலை. இம்முறை துணை மாலை முதலில் கோவில் பூசாரியால் போடப்பட்டது. பக்தர்கள் ஒவ்வொருவராக மாலை அணிந்து கொண்டார்கள். எனது முறை வரும்போது நான் எழுந்துசென்றேன். அப்போ பூசாரி எனது பழைய மாலை எங்கே என்று கேட்டார். நான் கொண்டுவரவில்லை என்று சொல்லவே அவர் மாலை போடமுடியாது வீட்டுக்குப்போய் எடுத்துவா இல்லையென்றால் போடமுடியாது என்று மட்டமான தோரணையில் கூறி என்னை இகழ்ச்சிபடுத்தினார். மிகவும் வேதனைப்பட்டேன். இதைப்பற்றி குருசாமி அவர்களுக்கும் எடுத்துச் சொன்னேன். ஒரு ஐயர் இப்படி நடந்துகொள்ளலாமா?**

**திருமதி பூமணி செல்வரட்ணம், ஸ்காபரோ**

சாமியே சரணம் ஐயப்பா! இம்முறை அடியேனும் இரண்டாவது வருடமாக மாலை அணிந்துள்ளேன். இம்முறை கார்த்திகை முதல் நாளன்று நானும் அந்த புனித நிகழ்ச்சியிலே கலந்து கொண்டேன். ஐயப்பன் அடியார் களுக்கு மாலை போடவேண்டியவர் குருசாமி தான். ஐயர் போடுவது மரபல்ல. உண்மையில் அந்த நிகழ்ச்சியில் எனக்கே மனம் வேதனைப்பட்டது. அதுவும் ஒரு மாலை போடாத ஐயர் மூலம் மாலை போடப்படுவது மனதுக்கு சங்கடம் அளித்தது. ஐயர் தன்னை முதன்மைப்படுத்த நின்றாரோ அல்லது நிர்வாகிகள் தவறுவிட்டர்களோ தெரியவில்லை.

உங்களைப் பழைய மாலையைக் கொண்டு வா என்றும் அல்லது மாலைபோடமாட்டேன் என்றும் சொல்லி மனதைப் புண்படுத்தும் அந்த செயலானது அந்த ஐயரின் தரக்குறைவையே காட்டுகிறது. அவர் சம்பளத்துக்காக வேதமந்திரங்களை ஓதிப்பிழைப்பவர். அவர் பக்தர்களுக்கு மனம் புண்படும்படியாக நடப்பது மிகவும் தரக்குறைவான செயல் அதுவும் மாலையிடும் பக்தர்களுடன் ஐயப்பன் கூடவே இருப்பார். ஐயர் பிழைவிட்டால் யாரும் தட்டிக் கேட்கமாட்டார்கள் என்று அவர்கள் நினைத்து செய்கின்ற காரியங்கள் தங்களையே தாங்கள் ஏமாற்றுவதாகும்.

வேதம் ஓதும் வைதீக அந்தணர்களை நாங்கள் வணங்கிப் போற்றவேண்டும். வேதம் ஓதினால் மட்டும் போதாது. வைதீகமாக அவர்கள் நடக்கவேண்டும். அடக்கம், பண்பு, பணிவு மனத்தூய்மை இதெல்லாம் அவர்களுக்கு இருந்தால் தான் அவர்களை நாம் வணங்கமுடியும். 'அந்தணன் என்போன் அறவோன் மற்ற எவ்வுயிர்க்கும் செந்தன்மைபூண்டொழுகலான்' என தமிழ்வேதம் கூறுகிறது.

விஷ்ணுவின் அவதாரமான புத்தபகவான் ௨500 வருடங்களுக்கு முன்பே பிராமணர்களின் போக்கைக் கண்டித்தார், இயேசுநாதர் ௨000 வருடங்களுக்கு முன்பு யூதப்பிராமணர்களாகிய மதக்குருக்கள்மாரின் போக்கைக் கண்டித்தார். வள்ளுவரும் தமிழ் வேதத்தில் "அந்தணன் என்போன் அறவோன் மற்றெவ்வுயிர்க்கும் செந்தன்மை பூண்டொழுகலான்" என பிராமணர்கள் எப்படி இருக்க வேண்டும் என்பதை வலியுறுத்தினார். கடந்த நூற்றாண்டில் சுவாமி விவேகானந்தரும் பிராமணர்களின் போக்கைக் கண்டித்தார்.

இன்று 95வீதமான பிராமணர்களும் பிராமணத் தன்மையிலிருந்து கீழிறங்கி வைசியர்களாகவே (வியாபாரிகள்) (அதாவது பணம் சம்பாதிப்பதே குறிக்கோளாக உடையவர்கள்) வாழுகிறார்கள். கௌரவப் பிரச்சினை ஏற்படும்போது சூத்திரர்களாகவும் மாறு கிறார்கள்.

இவர்களை நினைக்கும்போது எனது நீண்டகால சமய ஆராய்ச்சியின் பின் நாய்வால்தான் நினைப்புக்கு வருகிறது. தாயே, ஆலய அறங்காவலர்களுக்கு நீங்கள் அறிவிப்பது நல்லது. அவர்கள் தக்க நடவடிக்கை எடுப்பார்கள். சுவாமியே சரணம் ஐயப்பா

# 'வளமுடன் வாழ நல்ல மந்திரங்கள்'

(கடந்த இதழ் தொடர்ச்சி)

*சென்ற இதழில் மேடராசியிலிருந்து கடகராசி வரை பிறந்தோர்களுக்கு உரிய மந்திரங்களைப் பிரசுரமாக்கியிருந்தோம். மேலும் விருச்சிக ராசி வரை உள்ள மந்திரங்களை இம்முறை தருகின்றோம்.*



## சிம்ம ராசி

சிம்ம ராசியில் பிறந்தவர்கள் கஷ்டமான சமயங்களில், மாதம் ஒரு ஞாயிற்றுக்கிழமை சூரியனுக்கு சகஸ்ரநாம அர்ச்சனை செய்து கீழ்க்கண்ட மந்திரத்தை ஜெபித்து வந்தால் நல்ல பலன்கள் ஏற்படும்

**'ஓம் -ஹ்ரீம்-ஹிரீம்-சூர்யாய நம:'**

(நம: என்பதை நமஹ என்று உச்சரிக்க வேண்டும்)

## கன்னி ராசி

கன்னிராசியில் பிறந்தவர்கள் சிரமமான காலங்களில் மாதம் ஒரு புதன்கிழமை விஷ்ணுவுக்கு சகஸ்ரநாம அர்ச்சனை செய்து கீழ்க்கண்ட மந்திரத்தை ஜெபித்து வந்தால் நல்ல பலன் ஏற்படும்.

**'ஓம்-ஐம்-ஸ்ரீம்-ஸ்ரீம்-புதாய நம:'**

## துலா ராசி

துலாராசியில் பிறந்தவர்கள் துன்பம் வரும் காலங்களில் மாதம் ஒரு வெள்ளிக்கிழமை விரதம் இருந்து, சத்திய நாராயண பூசை செய்து, கீழ்க்கண்ட மந்திரத்தை ஜெபித்து வந்தால் நல்ல பலன் ஏற்படும்.

**'ஓம்-ஹரீம்-ஸ்ரீம்-சுக்ராய நம:'**

## விருச்சிக ராசி

விருச்சிக ராசியில் பிறந்தவர்கள் துன்பமான சமயங்களில், செவ்வாய்க்கிழமை விரதம் இருந்து துர்க்கையை பூஜித்து வணங்கி கீழ்க்கண்ட சுலோகத்தை ஜெபித்து வந்தால் துன்பங்கள் நீங்கும்.

**'தரணி கர்ப்ப ஸம்பூதம்<br>வித்யுத் காந்தி ஸமப்ரதம்<br>குமாரம் சக்தி ஹஸ்தம்ச<br>மங்களம் ப்ரணமாம் யஹம்'**

## குடும்பம் மேன்மையுற

கீழ்கண்ட சுலோகத்தை வினாயகரை தியானித்து காலைவேளையில் ஜெபித்து வந்தால் உங்கள் குடும்பம் மேன்மையுறும்.

**'ஓங்கணபதி வருக ஓங்கார கணபதி வருக<br>றீங் கணபதி வருக வருக றீங்கார கணபதி வருக<br>ஸ்ரீங்கணபதி வருக, ஸ்ரீங்காரகணபதி வருக<br>கங் கணபதி வருக எங்கள் குடும்பம் மேன்மையுற<br>வசி-வசி-வய நமசிவாய நம<br>கங்கனாய கனாய வருக சுவாஹா'**

### பலவித கஷ்டங்களிலிருந்து விடுதலைபெற

கீழ்கண்ட சுலோகத்தை ஜெபித்து வந்தால் பல வித கஷ்டங்களிலிருந்து விடுதலைபெறலாம்.

**'ரஷாம்ஸி யத்ர உக்ர விஷாச்ச நாகா:<br>யத்ர அரயோ தஸ்யு பலானியத்ர<br>தாவானலொ யத்ர ததாப்தி மத்யே<br>தத்ர ஸ்கிதா த்வம் பரிபாஸி விச்வம்!!'**

### காரியசித்தி உண்டாக

வீட்டை விட்டு வெளியில் புறப்படும்போது கீழ்க்கண்ட சுலோகத்தை ஜெபித்து சென்றால் காரிய சித்தி உண்டாகும்.

**'ஓம் அபராஜித பிங்காஷ நமஸ்தே ராம பூஜித<br>பிரஸ்தானஞ்ச கரிஷ்யாமி ஸித்திர்பவது மேஸதா!'**